# கொலம்பியா

உன்னதமான வெளியீடு



AVM
புரொடக்ஷன்ஸ்

# நாம் இருவர்

டாக்கிப் பாட்டுகள்

## T.R. மஹாலிங்கம்

..பாடிய..

GE.6396 { கோடையிலே....
(2 பாகங்கள்)

GE.6397 { விடுதலை (பாரதியார் பாடல்)
தேவாமிர்த மொழியாளே



G.H. RAO

ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மவுண்ட்ரோடு, மதராஸ்.2.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்

**மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்**

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

"லக்ஸ் டாய்லட் சோப்
உங்கள் சருமத்தை
சுத்தமாகவும், கவர்ச்சியுடைய
தாகவும் செய்யட்டும்" என்கிருர்
குமாரி என். ராஜம்




LTS. 166-111-40 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

# கல்கி

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| லர் 7<br>தழ் 6 | செப்டம்பர் 7 | சர்வசித்து<br>ஆவணி 22 |




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

"நான் அரசியலில் அதிர்ஷ்டசாலி" என்று சென்னை நகரசபை நடத்திய உபசாரக் ட்டத்தில் ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியார் கூறினார். அவர் கூறியது உண்மை ன்பதில் சந்தேகம் இல்லை. ஸ்ரீ ஷண்முகம் அதிர்ஷ்டசாலிதான். ஆனால் வெறும் அதிர்ஷ்ட லி மட்டும் அல்ல; மிக்க திறமைசாலியுங்கூட. உண்மையில், இறைவன் அருளால் வர் பெற்றிருக்கும் அறிவாற்றலும் திறமையுந்தான் அவ டைய அதிர்ஷ்டம் என்று சொல்ல வேண்டும்.




சிலர் வெறும் அதிர்ஷ்டத்தினால் மட்டும் உயர்ந்த தவிகளுக்கு வந்துவிடுவது உண்டு. அப்படிப்பட்டவர்கள் தவி அடைந்தது குறித்து ஜனங்கள் மகிழ்ச்சி அடைவ ல்லை; உற்சாக மடைவதுமில்லை. திறமை வாய்ந்தவரை அதிர்ஷ்டம் தேடி வந்து அடையும்போது அனைவரும் சந் தோஷமடைகிறார்கள்; உற்சாகப்படுகிறார்கள்.

சுதந்திர இந்தியாவின் முதல் அரசாங்கத்தில் ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் செட்டியார் பொருளாதார மந்திரியாக யமிக்கப்பட்ட செய்தியைக் கேட்டதும் தமிழ் நாட்டின் க்கள் அனைவரும் பெருமிதம் அடைந்தார்கள். அவருடைய யமனம் தமிழ்நாட்டுக்கே சிறப்பளிக்கும் சம்பவமாகும்.

ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் பொருளாதாரத் துறையில் தலை றந்த நிபுணர். வாக்கு வன்மையும் விவாதத் திறமையும் டைத்தவர். எவ்வளவு நுட்பமான சிக்கலான விஷயத் தையும் தெளிவாக எடுத்து விளக்கக் கூடியவர். இவ்வள வோடு. ஸ்ரீ ஷண்முகம் சிறந்த தமிழன்பர், என்பதும் தமிழ் ராய்ச்சியில் பற்றுள்ளவர் என்பதும் நமக்கு விசேஷ கிழ்ச்சி தருவனவாகும்.

சென்று போன காலத்தில் ஸ்ரீ ஆர். கே. ஷண்முகம் சில சமயம் காங்கிரஸ் கட்சியி ருந்தும் சில சமயம் காங்கிரஸுக்கு வெளியிலிருந்தும் சிறந்த தேசத் தொண்டு புரிந் ருக்கிறார். வருங்காலத்தில் அவர் செய்யப்போகும் தொண்டு இந்தியாவின் சரித்திரத்தில் வருடைய பெயர் புகழுடன் நிலைபெறச் செய்வதாயிருக்குமென்று எதிர்பார்க்கிறோம்.

MADRAS GOVERNMENT BRAND

SHARK liver OIL

and

Adamin

பிரகாசிக்கும் சூரியனும் - மகிழ்ச்சி தரும் வெண்ணிலவும் அனைவருக்கும் ஒரேவித ஒளியை வீசுகின்றன.

சிறியோர், முதியோர், ஆண், பெண், அரசன்-ஆண்டி அனைவருக்கு வியாதியை எதிர்த்துப் போராட அதிக வலுவும், ஆரோக்யமான தேக வளர்ச்சியும் ஏற்பட வைடமின் ஏ, டி, இரண்டும் மிகவும் அவசியம். மதராஸ் கவர்ன்மெண்ட் பிராண்டு ஷார்க் லிவர் ஆயில் & அடாமின் ஆகியவற்றை தவறாமல் உபயோகிப்பதால் அனைவருக்கும் ஒரே மாதிரியாக வாழ்க்கையின் ஒளிக்கு ஒளியான ஆரோக்யத்தை அள்ளிப் பொழிகிறது.

தயாரிப்பவர்கள் :

## கவர்ன்மெண்ட் ஆயில் பாக்டரி, கள்ளிக்கோட்டை

சென்னை மாகாணத்திற்கும் அடுத்துள்ள சமஸ்தானங்களுக்கும் ஏஜண்டுகள் :

**மெஸர்ஸ். பாரி & கம்பெனி லிமிடெட், மதராஸ்**




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 6

# என்ன சேதி?

## அநாதைகள் வருகிறார்கள்!

இப்போது பாஞ்சாலத்தில் நடக்கும் வகுப்புக் கலகங்களில் தங்கள் வீடு வாசல்களை இழந்து தப்பித்து ஓடி வந்தவர்களுடைய துயரக் கதையைக் கேட்கும்போது, நம்முடைய ஹிருதயமே வெடித்து விடும்போல இருக்கிறது. 'கடவுள் ஒருவர் இருக்கிறாரா?' என்றுகூடக் கேட்கத் தோன்றுகிறது. அம்மம்மா, என்ன கோரம், என்ன அநியாயம், என்ன அட்டூழியம்! மாடமாளிகைகளிலே சுக போகங்களில் வாழ்ந்தவர்கள் இன்று தங்கள் உடைமைகளை எல்லாம் இழந்து, அடுத்தவேளைச் சாப்பாட்டுக்கு என்ன செய்வதென்று தெரியாமல் திண்டாடுகிறார்கள். நேற்று வரை மனைவி மக்களுடன் சந்தோஷமாகவும் குதூகலமாகவும் வாழ்ந்தவர்கள் இன்று மூலைக்கொருவராக நின்று தவிக்கிறார்கள். எத்தனை குழந்தைகள் கொல்லப்பட்டன! எத்தனை பெண்கள் விதவைகளாகித் திக்கற்றுத் தவிக்கிறார்கள்!

இத்தகைய அகதிகளை ஆதரித்துக் காப்பாற்றுவதைப் போன்ற சிறந்த காரியம் வேறு எதுவும் இருக்க முடியாது. குற்றமற்ற இந்த மக்களுடைய துயரத்தைப் போக்கி, அவர்களுக்கு இதமும் ஆறுதலும் கூறி, அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டியது மற்ற இந்திய மக்களின் கடமையாகும்.

ஆயிரக்கணக்கான வருஷங்களாகச் சென்னை மாகாணம் வட நாட்டிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் துன்பத்துக்காளாகி அகதிகளாக வந்தவர்களுக்குத் தஞ்சம் அளித்து வந்திருக்கிறது. அந்தக் காருண்ய பரம்பரைக் கிணங்க, நமது பிரதம மந்திரி ஓமந்தூர் செட்டியார் பாஞ்சால அநாதைகள் பத்தாயிரம் பேருக்குத் தஞ்சம் அளிப்பதாக ஒப்புக்கொண்டு வந்திருக்கிறார். அதன் பேரில் பாஞ்சாலத்து அநாதைகள் சென்னைக்கு வரத் தொடங்கி விட்டார்கள். சென்னை மாகாணத்தின் சார்பாகப் பிரதம மந்திரி அளித்த வாக்கை நிறைவேற்றுவது இம் மாகாண மக்களின் கடமையாகும். சர்க்கார் தங்கள் கடமையை இது விஷயத்தில் நிறைவேற்றுவார்கள் என்று எதிர்பார்க்கலாம். ஆனால் பொது மக்களுக்கும் அந்தக் கடமையில் பங்கு உண்டு. நாதியற்றவர்கள் என்ற உணர்ச்சியுடன் வருகிறவர்களுக்கு அந்த உணர்ச்சியைப் போக்கிச் சென்னை மாகாணத்தின் நாலு கோடி மக்களும் அவர்களை ஆதரிக்கத் தயாராயிருக்கிறார்கள் என்ற நம்பிக்கையை உண்டு பண்ண வேண்டும். அவர்களை வைத்துப் பராமரிப்பதில் ஏற்படும் செலவை முழுதும் சர்க்கார் தலையிலேயே போட்டுவிடக் கூடாது. பொது மக்களும் ஒரு பகுதியை ஏற்றுக்கொள்ள வேண்டும். இது சம்பந்தமாக சென்னை ஷெரீப் அவர்களால் இன்னும் சில தினங்களில் கூட்டப்படும் பொதுக் கூட்டத்தில் பொது மக்கள் தங்களுடைய அநுதாபத்தைக் காரியாம்சத்தில் தெரிவித்துக் கொள்வதற்குத் திட்டம் வகுக்கப்படும் என்று நம்புகிறோம்.

## விமோசனம் பிறந்தது!

ஸர்தார் வல்லபாய் படேல் கொஞ்ச காலத்துக்கு முன்பு பேசும்போது, "இங்கிலீஷ்காரன் இந்தியாவில் எத்தனையோ விஷமத்தனங்களைச் செய்துவிட்டுப் போயிருக்கிறான். அவற்றை ஒழிப்பதே சுதந்திர இந்தியாவில் நம்முடைய முதல் வேலை" என்பதாகச் சொன்னார்.

அப்படி அவர் சொல்லிக் கொஞ்ச காலமேயாகிறது. அதற்குள், இங்கிலீஷ்காரன் செய்த மிக விஷமத்தனமான ஒரு காரியத்துக்கு நம்முடைய அரசியல் நிர்ணய சபை கடைசி முற்றுப் புள்ளி வைத்திருப்பது நம்மெல்லாருக்கும் திருப்தியையும் மகிழ்ச்சியையும் விளைவிக்கும்.

பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வந்த பிறகு இவ்வளவு பெரிய பரந்த பூமியை அடக்கி யாள்வதற்காக அவர்கள் கையாண்ட தந்திரங்களிலே, வகுப்புத் துவேஷத்தை வளர்க்கும் தனித் தொகுதி முறையை ஏற்படுத்தியது முக்கியமான தொன்று. இதன் மூலம், முஸ்லீம்கள் முஸ்லீம்களிடம் மாத்திரமே ஓட்டுக் கேட்கலாம். கிறிஸ்தவர்கள் கிறிஸ்தவர்களிடம் மாத்திரமே ஓட்டுக் கேட்கலாம். இதனால் ஒவ்வொரு வகுப்பும் தத்தம் வகுப்பின் நன்மையை மாத்திரமே கவனித்துக் கொள்வதென்று ஏற்பட்டது. தேசம் என்பதாக ஒன்று இருக்கிறது என்பதை மறந்து ஒவ்வொரு வகுப்பாரும் தங்கள் வகுப்புக்குச் சலுகைகள் பெறுவதற்காகவே சதா சண்டை போட்டுக் கொண்டு வந்தார்கள்.

இன்று தேசம் ஜின்னாபின்னப்பட்டிருப்பதற்கும், பாஞ்சாலத்தில் கோரமான வகுப்புக் கலகங்கள் நடப்பதற்கும் விதை போட்டது மேற்படி தனித் தொகுதி முறையிலேதான்.

இத்தகைய விஷம ஏற்பாட்டுக்குக் கடைசியாக இப்போது விமோசனம் பிறந்திருக்கிறது. தனித் தொகுதி முறையை ஆழமாகக் குழி தோண்டிப் புதைப்பதென்று அரசியல் நிர்ணய சபை முடிவு செய்திருக்கிறது. தோண்டுகிற குழியை வெகு வெகு ஆழமாகத் தோண்டி நன்றாய் மண்ணைப் போட்டு மூடட்டும் என்று நாம் பிரார்த்தனை செய்கிறோம்.

## அதிர்ஷ்டக்காரர்கள் !

துரியோதனாதியர்கள் நூற்றொருவரிலே விகர்ணன் என்ற மகா புத்திசாலி ஒருவன் இருந்தான். இந்தியாவில் இருக்கும் ஐந்நூற்றுச் சொச்சம் சமஸ்தானாதிபதிகளிலே ஒரு புத்திசாலி இருக்கிறார் என்றால், அவர் தற்போதுள்ள கொச்சி மகாராஜாதான் என்று சொல்லலாம். காலப் போக்கை அனுசரித்து நடக்கக் கூடிய புத்திசாலித்தனம் அவர் ஒருவரைத் தவிர வேறு எந்த மன்னரிடம் இருக்கிறது ?

நல்ல காரியம் எதுவானாலும், கொச்சி சமஸ்தானம் முன்னணியில் நின்று வருவதைப் பார்க்கிறோம். முதல் முதல் பொறுப்பாட்சியை அமுலுக்குக் கொண்டு வந்தது கொச்சி சமஸ்தானமேயாகும். முதல் முதல் அரசியல் நிர்ணய சபையில் சேரப்போவதாகச் சொன்ன சமஸ்தானம் கொச்சியேயாகும். இப்போது இந்தியாவிலேயே முதல் முதலாகப் பூரணப் பொறுப்பாட்சியை அமுலுக்குக் கொண்டு வந்திருப்பதும் கொச்சி சமஸ்தானந்தான் !

கொச்சி சமஸ்தானத்திலே இப்போது திவான் ஆட்சி முற்றுப் பெற்று விட்டது. சட்ட சபைக்குப் பொறுப்பான மந்திரி சபை ஆட்சி அமுலுக்கு வந்திருக்கிறது. சென்ற வியாழக்கிழமையன்று ஸ்ரீ கோவிந்த மேனன் என்பவர் கொச்சி சமஸ்தானத்தின் பிரதம மந்திரி பதவியை ஏற்றுக் கொண்டு விட்டார்.

கொச்சி மக்கள் ரொம்ப அதிர்ஷ்டக்காரர்கள் என்பதில் சந்தேகமில்லை.

## திருப்ப முடியுமா ?

சின்னஞ் சிறிய கொச்சி சமஸ்தானம் இவ்வளவு முக்கியமான காரியங்களையெல்லாம் சாதித்திருக்கையில், அதைவிடப் பன்மடங்கு பெரியதும் பல துறைகளில் அபிவிருத்தி யடைந்ததுமான மைசூர் சமஸ்தானம் போகும் போக்கைப் பார்க்கும் போது எல்லோருக்கும் வருத்தமே உண்டாகும்.

கொஞ்ச காலத்துக்கு முன்பு, மைசூர் சமஸ்தானம் அரசியல் நிர்ணய சபையில் தைரியமாகச் சேர்ந்ததை எல்லோரும் வரவேற்றார்கள்; பாராட்டினார்கள். மைசூர் சமஸ்தானம் இன்னும் அதைப் போன்ற பல முற்போக்கான காரியங்களைச் செய்யும் என்றும் எதிர்பார்த்தார்கள். ஆனால், அது இப்போது ஏமாற்றமாகவே முடிந்திருக்கிறது. கொச்சி சமஸ்தான மக்கள் வாய் திறந்து பொறுப்பாட்சி கேட்காமலிருந்தபோதே அவர்களுக்குப் பொறுப்பாட்சி கிடைத்து விட்டது. ஆனால் மைசூர் மக்களோ, வாய் திறந்து கேட்டார்கள்; இரைந்து கத்தியும் பார்த்தார்கள்; கிளர்ச்சியும் நடத்தினார்கள். ஒன்றும் பயனில்லாமல் போகவே, கடைசியில் சமஸ்தான காங்கிரஸ் இப்போது பொறுப்பாட்சி கோரிச் சத்தியாக்கிரகப் போரை ஆரம்பித்திருக்கிறது. சமஸ்தான சர்க்காரும் அடக்கு முறைச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

கொச்சி சமஸ்தானம் காலத்தின் போக்கை அனுசரித்துப் போகிறது. ஆனால், மைசூர் சமஸ்தானமோ அடக்கு முறை தர்பார் மூலம் காலத்தைத் தன் போக்குக்குத் திருப்ப முயற்சி செய்கிறது. அந்த முயற்சி பலிக்குமா ?

# இரண்டாவது போராட்டம்

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து
மகாத்மா காந்தி மாபெரும்
வெற்றி பெற்றார்.

பிரிட்டிஷ்
ஏகாதிபத்தியம்

பிரிட்டிஷ் ஆட்சியின் சிறுகுட்டியான வகுப்புத்
துவேஷத்தை ஒழிப்பதிலும்
காந்திஜி வெற்றி
பெறுவாராக!

போ, தொலைந்து போ!
கப்பலில் இடம் இல்லாவிட்டால்
கடலிலே விழு!

## நிகழ்ச்சிச் சித்திரம்

① இவர் தேசபக்தர்!



② இந்த மகான் யார்?

-சாஸ்திரி




மைசூரிலும் சத்தியாக்கிரகம் ஆரம்பமாகி விட்டது.

எங்கே போகிறீர்? இப்படி இந்தக் குளிர்ந்த நிழலில் தங்கலாமே?

மைசூர் சமஸ்தான காங்கிரஸ்

SHASTRY

# அன்னக் கொடி நாட்டுங்கள்

ஆகஸ்டு மாதம் 15உ தமிழ் நாடெங்கும்,—சென்னை மாகாண மெங்கும்,—சுதந்திர தேசியக் கொடியை நாட்டினார்கள். நாட்டிய கொடியை வாழ்த்தினார்கள்; வணங்கினார்கள். ஆடினார்கள்; பாடினார்கள். ஆயிரம் தியாகம் செய்து அடைந்த சுதந்திரக் கொடியை,—தேச விடுதலைக்கு அறிகுறியை,—என்றென்றைக்கும் பாதுகாப்போம் என்று உறுதி கொண்டார்கள்.

அந்தச் சுதந்திரக் கொடியின் மானத்தைக் காப்பதற்கு, அதன் கௌரவத்தை நிலை நாட்டுவதற்கு, அடுத்த படியாகத் தமிழ் மக்கள் அன்னக் கொடி கட்டிப் பறக்கவிட வேண்டிய அவசியம் நேரிட்டிருக்கிறது.

இந்தப் புண்ணிய வருஷத்தில் நம் கண் முன்னால் யாரையும் பட்டினியால் சாக விடமாட்டோம் என்று அவர்கள் சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும்.

முக்கியமாக, குடியானவர்களும் விவசாயிகளும் மிராசுதார்களும் மிட்டாதார்களும் ஜமீன்தார்களும் பண்ணையார்களும் இந்தப் புண்ணிய பாரத பூமியின் பழைய தர்ம வாழ்க்கையை எண்ணிப் பார்க்க வேண்டும்.

"அன்னதானத்தைக் காட்டிலும் சிறந்த தர்மம் வேறில்லை" என்று நமது மூதாதையர் கூறினார்கள்.

திருப்பதியிலிருந்து இராமேசுவரம் வரையிலும் எண்ணற்ற அன்ன சத்திரங்களை ஏற்படுத்தினார்கள்.

ஒவ்வொரு ஆலயத்திலும் அசலூர்க்காரர் இவ்வளவு பேருக்குத் தினந்தோறும் அன்னதானம் செய்ய வேண்டும் என ஏற்படுத்தினார்கள்.

இல்வாழ்வான் ஒவ்வொருவனும் தினந்தோறும் தான் சாப்பிடுவதற்கு முன்னால் வீட்டு வாசலிலே வந்து நின்று கொண்டு "அதிதிகள் யாரேனும் உண்டோ?" என்று உரத்த சத்தமிட்டுக் கேட்டான்.

அந்தக் குரலைக் கேட்டு வந்த அதிதிக்கு முதலில் அன்னம் படைத்து விட்டுப் பிறகு அவன் உண்டான்.

இப்படிப்பட்ட அன்னதானத்துக்குப் பெயர்போன நமது அருமைத் தாய் நாட்டில் அன்னிய ஆட்சியின் கீழ் நமது பரம்பரைத் தர்மத்தை மறந்திருந்தோம். அன்ன சத்திரங்களை மூடினோம். பிச்சைக்காரனுக்குச் சோறு போடுவது பெரும் பிசகு என்ற புதிய தர்மத்தை மேற்கொண்டோம்.

'பட்டினி கிடப்பவனுக்குச் சோறு போட வேண்டியது தனி மனிதனுடைய பொறுப்பல்ல,—சர்க்காருடைய பொறுப்பு' என்ற புதிய வேதாந்தக் கொள்கை பரவிற்று.

ஆனால் அன்னிய அதிகார வர்க்க சர்க்காரும் அந்தப் பொறுப்பைச் சரிவர நிறைவேற்றவில்லை. ஆகையினாலேதான் நமது பாரதியார்,

"சொல்லக் கொதிக்குதடா நெஞ்சம்!—வெறும்
சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்?"

என்று உள்ளமுருகிப் பாடினார்.

அன்னிய ஆட்சியின் கீழ் நாட்டில் ஏற்பட்டிருந்த நிலைமையை எண்ணிப் பாரதி மேற்கண்டவாறு பாடினார்.

வரப்போகும் புதிய பாரத சமுதாயத்தில் மேற்படி 'சொல்லக் கொதிக்கும்' நிலைமை ஒருநாளும் ஏற்படாது என்று நமது மகாகவி நம்பினார். அந்த தைரியத்தினாலேதான்,

"தனி ஒருவனுக்கு உணவில்லை யெனில்
ஜகத்தினை அழித்திடுவோம்!"

என்று சபதங் கூறினார்.

மேற்படி பாடல் வரிகளைப் பதினாயிரக் கணக்கான குரல்கள் செந்தமிழ் நாட்டிலே சென்ற முப்பது வருஷ காலத்திலே பாடியிருக்கின்றன. கோடிக்கணக்கான செவிகள் கேட்டுப் பெருமிதம் அடைந்திருக்கின்றன.

பாடியவர்கள் பாடக் கேட்டவர்கள் எல்லோரும், "சுதந்திரத் தமிழ் நாட்டிலே அத்தகைய நிலைமை நேராது!" என்று பூரணமாய் நம்பியிருந்தார்கள்.

அந்த நம்பிக்கையை மெய்ப்படுத்த வேண்டிய காலம் இப்போது வந்திருக்கிறது. "இப்போது" என்று

சொன்னால் இந்த செப்டம்பர் மாதத்திற்குள்ளே என்று அர்த்தம்.

அதிகப்படியான தானியத்தை வைத்திருக்கும் விவசாயிகளும் குடியானவர்களும் மிராசுதார்களும் பண்ணையார்களும் இந்த செப்டம்பர் மாதத்தில் தங்களிடமுள்ள அதிகப்படி தானியத்தைக் கொடுத்தாக வேண்டும்.

கொடுப்பது என்றால், தானமாகக் கொடுக்கச் சொல்லவில்லை. விலைக்குக் கொடுக்கும்படிதான் சொல்கிறோம். ஆனாலும் தானங் கொடுப்பதாகவே எண்ணிக் கொண்டு விலைக்குக் கொடுக்கச் சொல்கிறோம்.

உங்கள் வீட்டு வாசலிலே ஒருவன் பட்டினி கிடந்து சாகும் தறுவாயில் இருந்தால், அவனுக்கு ஒரு பிடி சோறு போடாமல் நீங்கள் சாப்பிடுவீர்களா? சாப்பிட மனம் வருமா?

அந்த மாதிரி எண்ணிக் கொண்டு உங்களிடமுள்ள அதிகப்படி நெல்லை விலைக்குக் கொடுக்கும்படி சொல்கிறோம்.

உங்கள் வீட்டு வாசலிலே பட்டினி கிடந்து ஒருவன் செத்தால் என்ன? அடுத்த வீட்டில் செத்தால் என்ன? அடுத்த வீதியிலோ அல்லது அடுத்த ஊரிலோ செத்தால் என்ன?

தமிழ் நாட்டிலே மக்கள் பட்டினி கிடந்து செத்தாலும், ஆந்திர நாட்டிலே செத்தாலும், மலையாளத்திலே செத்தாலும், வீட்டு வாசலில் "அம்மா! பசி பொறுக்கவில்லையே?" என்று கதறிக் கொண்டு செத்து விழுவதைப் போலத்தான்.

நேரில் உங்கள் காதில் அந்தச் சத்தம் விழாவிட்டால், மறுநாள் தினப் பத்திரிகைகளின் மூலம் விழுகிறது.

பத்திரிகை படிக்காதவர்களின் காதிலேயும் மேற்படி அபயக் குரல் கட்டாயம் விழுந்தான் செய்யும்.

அது காதில் விழுந்தாலும் விழாவிட்டாலும், அதிகப்படி தானியத்தை இந்த மாதத்தில் விற்காமல் வைத்திருக்கும் விவசாயி ஒவ்வொருவரையும் மக்களைப் பட்டினி போட்டுக் கொன்ற கொடிய பாவம் சேரத்தான் செய்யும்.

இந்தியா சுதந்திரம் அடைந்துள்ள இந்தப் புனித வருஷத்தில் மேற்படி பாவத்துக்கு உள்ளாகலாமா?

ஒருநாளும் கூடாது. அதற்குப் பதிலாக, ஒவ்வொரு குடியானவனும் விவசாயியும் தன்னுடைய வீட்டில் சுதந்திரக் கொடியின் பக்கத்திலே அன்னக் கொடியையும் நாட்ட வேண்டும்.

தன் மனைவி மக்கள் உயிர் வாழ்வதற்கு அவசியமானதைக் காட்டிலும் அதிகப்படியுள்ள ஒவ்வொரு தானியத்தையும் கொடுத்துவிட வேண்டும்.

பிரதம மந்திரி ஓமந்தூர் ரெட்டியார் தமது உருக்கமான அறிக்கையில் சொல்லியிருப்பதுபோல், தமிழ்நாட்டு விவசாயிகள் இந்த வருஷத்தில் செய்ய வேண்டிய யக்ஞம் இதுதான்; புண்ணிய கைங்கரியம் இதுதான்; தானமும் தர்மமும் தவமும் இதுதான்.

• • •

சென்னை மாகாணத்தில் இத்தகைய உணவுக் குறைவு ஏற்பட்டிருப்பதன் காரணம் இதுதான் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. அதற்குப் பல காரணங்களும் காரணங்களுக்குக் காரணங்களும் உண்டு.

உலக மெங்குமே உணவு தானியப் பற்றுக் குறை ஏற்பட்டிருப்பது யாவரும் அறிந்த விஷயம்.

நூற்றைம்பது வருஷத்து பிரிட்டிஷ் சர்க்காரின் ஆட்சியின் கீழ் மக்களின் பெருக்கத்துக்கு ஏற்றவாறு தானிய உற்பத்திப் பெருக்கத்துக்கு ஏற்பாடு செய்யாமல் இருந்து விட்டார்கள். பர்மாவிலிருந்து வரும் அரிசி சாசுவதம் என்று எண்ணி விட்டார்கள்.

சென்னை மாகாணத்தின் நீர்வளமும் நிலவளமும் எவ்வளவோ இருந்தும் அவற்றைச் சரியானபடி உபயோகப்படுத்தவில்லை. இம் மாகாண மக்களுக்கு வேண்டிய உணவுப் பொருளை யெல்லாம் இங்கேயே உற்பத்தி செய்து கொள்வதற்குத் திட்டம் போடவில்லை; முயற்சியும் செய்யவில்லை.

இத்தகைய காரணங்களினால், உணவுப் பற்றுக் குறை ஏற்பட்டது. உணவுப் பொருளை ரேஷன் செய்ய வேண்டி யிருந்தது. அட்வைஸரி கவர்ன்மெண்டின் கீழ் அதிகார வர்க்கத்தார் ஓரளவு இதை யெல்லாம் சரிவர நடத்திச் சமாளித்து வந்தார்கள்.

சென்ற வருஷம் ஸ்ரீ பிரகாசம் மந்திரி சபையின் ஆட்சியில் 'குளறுபடிகேஷன்' தொடங்கியது.

போனஸ் கொடுக்கும் முறையை முன்னுக்குப் பின் முரணாக அடிக்கடி மாற்றிக் கொண்டு வந்தார்கள். இதனால் விவசாயிகளுக்குத் தானியத்தைக் கொடுக்காமல் பதுக்கி வைத்துக் கொண்டால் பின்னால் லாபம் உண்டு என்னும் எண்ணம் ஏற்பட்டது.

ஆக, உலக தானிய விளைவு நிலைமையிலிருந்து சென்ற வருஷத்துச் சென்னை சர்க்காரின் போலஸ் ஊழல் வரையில் பல காரணங்கள் சேர்ந்து இந்த மாதத்தில் சென்னை மாகாணத்தில் பெரும் நெருக்கடியை உண்டு பண்ணியிருக்கின்றன. செப்டம்பர் மாதத்தில் குறைந்த பட்சம் ஒன்றரை லட்சம் டன் நெல் கொள் முதல் ஆகாவிட்டால் பல இடங்களில் ரேஷன் முறை சீர்குலைந்து நாடெங்கும் பஞ்சம் உண்டாகும் என்ற பீதிகரமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

• • •

தற்போதுள்ள ஓமந்தூர் மந்திரி சபையில் உணவு மந்திரி டாக்டர் ராஜன் வரப்போகும் நெருக்கடியை முன்னதாகவே உணர்ந்து இரண்டு மூன்று மாதங்களாக எச்சரிக்கை செய்து வருவதுடன் தானியக் கொள் முதல் விஷயமாகப் பிரம்மப் பிரயத்தனம் செய்து வருகிறார்.

ஆயினும் அவருடைய பிரயத்தனம் இதுவரையில் உணவு நெருக்கடியைத் தவிர்ப்பதற்கு வேண்டிய பலனை அளிக்கவில்லை.

இதற்குப் பல காரணங்கள் சொல்லப் படுகின்றன. நிலைமையின் நெருக்கடியை நன்கு உணர்ந்து ஒத்துழைக்க வேண்டியவர்கள் எல்லாரும் சரியாக உணவு மந்திரியுடன் ஒத்துழைக்கவில்லையென்று சொல்லப் படுகிறது.

இந்த மந்திரிசபையை அபகீர்த்திக்கு உள்ளாக்கிக் கவிழ்த்து விடுவதற்காக ஆந்திர ஜில்லாக்களில்,—முக்கியமாக நெல் களஞ்சியங்களான கிருஷ்ணாவிலும் கோதாவரியிலும்,— நெல்லைக் கொடுக்க வேண்டாமென்ற பிரசாரம் நடந்ததின் பலன் என்று ஒரு காரணம் சொல்லப்படுகிறது. ("இண்டியன் எக்ஸ்பிரஸ்" 3உ. காலை இதழ் 6-ம் பத்தி பார்க்க.)

இது எவ்வளவு தூரம் உண்மையென்று நாம் சொல்ல முடியாது. ஆனால் மந்திரிசபையின் மேலுள்ள கோபத்துக்காகப் பல்லாயிரக் கணக்கான மக்களைப் பஞ்சத்துக்கு உள்ளாக்கப் பார்ப்பது மகா பாதகம் என்று மட்டும் நிச்சயமாகச் சொல்லலாம்.

• • •

தானியச் சேகரிப்பு வெற்றி பெறாததற்குக் காரணம் உணவு மந்திரி டாக்டர் ராஜன்தான் என்றும், ஆகையால் அவர் ராஜிநாமா செய்ய வேண்டுமென்றும் சிலர் சொல்லுகிறார்கள்.

பல மாத காலமாக அவருடைய ராஜிநாமா தயாராகக் காத்துக் கொண்டிருக்கிறது என்று நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பிரதம மந்திரியும் மற்ற மந்திரிகளும் வற்புறுத்துவதினாலேயே டாக்டர் ராஜன் உணவு மந்திரி பதவியை இன்னும் வகித்து வருகிறார்.

உணவு மந்திரியாயிருப்பதற்கு டாக்டர் ராஜனைவிடத் தகுதியுள்ளவர் இல்லையென்று பிரதம மந்திரியும் மற்ற மந்திரிகளும் கருதுகிறார்கள்.

நம்முடைய பரிபூரண நம்பிக்கையும் அதுதான்.

டாக்டர் ராஜன் விவசாய வளர்ச்சியைப் பற்றியும் உணவு உற்பத்திப் பெருக்கத்தைப் பற்றியும் வெறுமே பேசிக் கொண்டிருப்பவர் அல்ல.

ஏழெட்டு வருஷத்துக்கு முன்னால் கட்டாந்தரையாகக் கிடந்த பல நூறு ஏக்கரா பூமியைப் பண்படுத்தி ஆயிரக் கணக்கான கலம் நெல் ஆண்டுதோறும் உற்பத்தி செய்து பொது மக்களுக்குக் கொடுத்து வருகிறவர்.

டாக்டர் ராஜனால் இந்த உணவு நெருக்கடியைச் சமாளிக்க முடியவில்லையென்றால், வேறு யாராலும் சமாளிக்க முடியாது.

ஒத்துழைக்க வேண்டியவர்கள் எல்லாரும் சரிவர ஒத்துழைத்தால் டாக்டர் அவர்களால் இந்த நெருக்கடியைக் கட்டாயம் சமாளிக்க முடியும்.

அத்தகைய ஒத்துழைப்புக் கிடைக்கும் என்பதற்குச் சமீபத்தில் அறிகுறிகள் காணப்படுகின்றன.

பிரதம மந்திரி தாமே மற்றவர்களுக்கு முன்மாதிரியாகப் பிரசார வேலைக்குப் புறப்பட்டிருக்கிறார்.

மற்ற மந்திரிகளும் சுற்றுப் பிரயாணம் தொடங்கியிருக்கிறார்கள்.

சர்க்கார் அதிகாரிகளும் தங்கள் கடமையைச் சுறுசுறுப்பாகச் செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்.

ஸ்ரீ பிரகாசம்காரு அவர்களும் கிருஷ்ணா — கோதாவரி ஜில்லா விவசாயிகளுக்கு நெல்லைக் கொடுத்துவிடும்படி விண்ணப்பம் விடுத்திருக்கிறார்.

மற்ற சட்டசபை அங்கத்தினர்கள் கொள் முதல் வேலைக்குக் குறுக்கே நிற்காமலாவது இருப்பார்கள் என்று நாம் எதிர்பார்க்கலாமல்லவா?

எனவே, செப்டம்பர் மாதக் கடைசிக்குள் நெருக்கடி தீர்ந்துவிட்டது என்று சொல்லக் கூடிய நிலைமை ஏற்படுமென்று எதிர்பார்க்கிறோம்.

• • •

விவசாயிகள் — குடியானவர்களுக்குத் தற்சமயம் உள்ள குறைகளும் புகார்களும் நமக்குத் தெரியாமலில்லை.

நமது பிரதம மந்திரியும் உணவு மந்திரியும் விவசாயிகள்; அவர்களுக்கு விவசாயிகள் — குடியானவர்களுடைய குறைகள் எல்லாம் நிச்சயமாய்த் தெரிந்திருக்கின்றன.

"மற்ற எல்லாப் பொருள்களின் விலையும் அளவில்லாமல் உயர்ந்திருக்கிறதே? நெல்லை மட்டும் குறைந்த விலைக்குத் தரச் சொல்கிறீர்களே?" என்று அவர்கள் கேட்பதில் நியாயம் இருக்கத்தான் செய்கிறது.

"விவசாயக் கருவிகள் கிடைக்கவில்லை; உரம் கிடைக்கவில்லை; பிண்ணாக்குக் கிடைக்கவில்லை; மாட்டுத் தீவனம் கிடைக்கவில்லை; நீர்ப்பாசன வசதி போதவில்லை!" என்றெல்லாம் அவர்கள் கேட்பதிலும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது.

இந்த செப்டம்பர் — அக்டோபர் நெருக்கடி தீர்ந்து மூச்சுவிட இடங் கிடைத்ததும் விவசாயிகளுக்கு எந்தெந்த வழிகளில் உதவி செய்யலாம் என்று நமது காங்கிரஸ் மந்திரிகள் திட்டம் போடுவார்கள்.

உணவு இலாகாவும், விவசாய இலாகாவும், மராமத்து இலாகாவும் ஒத்துழைத்து வேலை செய்வதற்குரிய மார்க்கங்களைக் கண்டு பிடிப்பார்கள்.

இதையெல்லாம் மந்திரிகள் காலா காலத்தில் செய்யாவிட்டால் அவர்களைக் குற்றம் கூறுவதற்கு நமக்கு உரிமை உண்டு. பிரகாசம் மந்திரி சபையைப் போகச் சொன்னதுபோல் இந்த மந்திரி சபையைப் போகச் சொல்லும் சக்தியும் பொதுஜனங்களிடம் இருக்கத்தான் செய்கிறது.

ஆனால் சுவரை வைத்துக் கொண்டு தான் சித்திரம் எழுதவேண்டும்.

மக்கள் உயிரோடிருந்தால்தான் மக்களின் சர்க்கார் நடக்க முடியும்.

தேசத்தில் அமைதியான முறையில் முன்னேற்றத்துக்குரிய திட்டங்களை நடத்த முடியும்.

மக்கள் பஞ்சத்தில் சாகாமல் காப்பாற்றுவது முதல் காரியம்.

பஞ்சம் நாட்டின் ஒரு மூலையில் வந்துவிட்டால் அது அங்கேயே நிற்குமென்று சொல்ல முடியாது. பஞ்சத்திலிருந்து பலவிதக் குழப்பங்கள் உற்பத்தியாகும். இன்று தானியத்தைப் பதுக்கி வைத்திருப்பவர்களே நாளைக்குப் பஞ்சக் கொடுமையை மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாக அனுபவிக்க நேரிடலாம்.

ஆகவே தமிழ் மக்கள் எல்லாரையும் முக்கியமாக விவசாயிகளையும் குடியானவர்களையும் ரொம்பவும் வேண்டிக் கொள்கிறோம்.

தானங்களுக்குள்ளே மிகச் சிறந்த தானமாகிய அன்ன தானத்தை இப்போது செய்யுங்கள்!

ஜனங்கள் எல்லாரும் வயிறு நிறையச் சாப்பிட்டுப் புளியேப்பம் விட்டுக் கொண்டிருக்கும் காலத்தில் அன்ன தானம் செய்வதிலே புண்ணியம் ஒன்றும் இல்லை.

சமாராதனையும், ததியாராதனையும், மகேசுவர பூஜையும், கம்ப சேர்வையும் சுபிட்சமான காலத்தில் செய்வதில் யாதொரு பயனும் இல்லை.

பஞ்சம் வருமோ என்ற நெருக்கடி ஏற்பட்டிருக்கும் சமயத்தில் அன்ன தானம் செய்வதுதான் உண்மையில் புண்ணியம். இந்த மாதத்தில் நீங்கள் விலையும் போனஸும் வாங்கிக் கொண்டு நெல்லைக் கொடுப்பது உண்மையான அன்னதானம் செய்வதாகும். மக்களைப் பட்டினி மரணத்திலிருந்து காப்பாற்றும் புண்ணியச் செயலாகும்.

இத்தகைய சந்தர்ப்பத்தில் நெல்லைப் பதுக்கி வைப்பது பெரும் பாதகம்.

ஆகையால் உங்களிடமுள்ள அதிகப்படி நெல்லை உடனே கொடுங்கள்.

அதிகாரிகளை அழைத்து நல்ல மரக்காலால் அளந்து கொடுங்கள்.

மனதைத் திறந்து தாராள உள்ளத்துடன் தானம் கொடுப்பது போல நெல்லைக் கொடுங்கள்.

உங்களுடைய உணவில் கொஞ்சம் குறைத்துக்கொண்டாவது கொடுங்கள்.

"ஒன்றே செய்யவும் வேண்டும்—ஒன்றும்
நன்றே செய்யவும் வேண்டும்—நன்றும்
இன்றே செய்யவும் வேண்டும்!"

என்னும் கபில முனிவரின் வாக்கை உடனே நிறைவேற்றி வையுங்கள்.

நீங்களும் உங்களுடைய சந்ததிகளும் நன்கு யிருப்பீர்கள்!

கடவுள் அருள் புரிவார்!

# ராணிப் பேட்டைக்கு ஜே!

சென்ற ஆகஸ்டு 30உ யன்று ஆற்காடு என்னும் புண்ணிய க்ஷேத்திரத்துக்கு நான் சென்றிருந்தேன். சிறந்த வாசாலகரும் நிர்வாகத் திறமை வாய்ந்தவரும் தற்போதைய மைசூர் திவானுமான ஸர் ஏ. ராமசாமி முதலியார் பிறந்ததினால் மட்டும் ஆற்காடு பெருமை யடைந்து விடவில்லை. ஒரு காலத்தில் ஆற்காடு கர்நாடக நவாப்புகளின் தலைமை நகரமாகவும் பலம் வாய்ந்த கோட்டையாகவும் இருந்தது. அந்தக் கோட்டையிலேதான் மகாத்மா கிளைவ் பெரியார் தமது மகிமையை முதன் முதலில் வெளிப்படுத்தினார். ஒரு சில வெள்ளை சோல்ஜர்களையும் இந்தியச் சிப்பாய்களையும் வைத்துக் கொண்டு கிளைவ் துரை ஆற்காடு கோட்டையைச் சந்தா சாகிப்பின் முற்றுகையிலிருந்து காப்பாற்றிய விவரத்தைப் பள்ளிக்கூடப் புத்தகங்களில் நாம் படித்திருக்கிறோம். அரிசிச் சோற்றைத் தாமும் தமது இனத்தாரும் சாப்பிட்டு விட்டுக் கஞ்சியை இந்தியச் சிப்பாய்களுக்குக் கொடுத்துத் 'தியாக மூர்த்தி கிளைவ்' என்று பட்டம் பெற்ற விவரமும் நாம் நன்கு அறிந்ததே.

அத்தகைய சரித்திரப் புகழ்பெற்ற ஆற்காட்டை ஆகஸ்டு 30உ பார்க்கும் பேறு எனக்குக் கிடைத்தது. ஆற்காடு கோட்டையில் இடிந்த பகுதி யெல்லாம் போக, இடியாமல் பாக்கி நிற்கும் ஒரு கோட்டை வாசலையும் அதிலே 1751-ம் ஆண்டில் கிளைவ் சாதித்த காரியத்தைக் கருங்கல்லில் எழுதி காட்டி யிருப்பதையும் பார்த்தேன். முதன் முதலாக பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு அஸ்திவாரம் இடப்பட்ட ஆற்காடு கோட்டையின் மத்தியில் உள்ள ஒரு மண் மேட்டின் உச்சியில் பாரதநாட்டின் சுதந்திர தேசியக் கொடி கம்பீரமாகப் பறப்பதையும் கண்டு களித்தேன்.

இந்தப் பேறுகள் எல்லாம் எனக்குக் கிடைப்பதற்கு, ராணிப்பேட்டை தேச பக்தர்களான ஸ்ரீ கே. ஆர். கல்யாண ராமய்யரும், ஜனாப் முகமத் சுலைமான் சாயபுவும் காரணமா யிருந்தார்கள்.

• • •

ராணிப்பேட்டை ஸ்ரீ கல்யாணராமய்யர் இருபது ஆண்டுகளுக்கு மேலாக இடைவிடாது தேசத் தொண்டு செய்து வரும் அன்பர். 1942 ஆகஸ்டு இயக்கத்தில் இரண்டு வருஷம் சிறைத் தண்டனை அநுபவித்தவர். ஒரு மாதத்துக்கு முன்னால் அவரைத் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்தபோது, "பாரதி மண்டப நிதிக்குக் கொஞ்சம் பணம் வசூலித்துக் கொடுக்கக் கூடாதா?" என்று கேட்டு வைத்தேன். "நேரில் வந்து வாங்கிக் கொள்வதா யிருந்தால் வசூலித்துக் கொடுக்கிறேன்" என்றார். "பேஷாக வருகிறேன்! அதைக் காட்டிலும் வேறு என்ன வேலை?" என்றேன். "எவ்வளவு ரூபாய் வேண்டும்?" என்று கல்யாணராமய்யர் பேரம் பேசத் தொடங்கினார். "எது கொடுத்தாலும் நான் வாங்கிக் கொள்கிறேன். எதைக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறேன். என்னத்தைக் கொடுத்தாலும், தாங்கள் கொடுப்பதை, சந்தோஷமாய் வாங்கிக் கொள்கிறேன். ஆனால், பாரதி பெயரின் கௌரவத்தைக் காப்பதற்காக முந்நூறு ரூபாயாவது கொடுங்கள்!" என்றேன். "சரி!" என்று சொல்லிவிட்டு நண்பர் போயே போய்விட்டார்.

பாரதி பெயரின் கௌரவத்தை ஸ்ரீ கல்யாணராமய்யர் ஒன்றுக்கு எட்டு மடங்காகக் காப்பாற்றி விட்டார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். பாரதி மண்டப நிதிக்கு ரூ. 300 மட்டும் அவர் கொடுக்கவில்லை; ரூ. 2,300க்குமேல் கொடுத்தார்.

பணம் கொடுத்தது மட்டும் முக்கியமல்ல. அதை வசூலித்த முறையும் கொடுத்த விதமும் மிக முக்கியமானவை. நன்கொடைகளில் சில பெருந் தொகைகளை முஸ்லிம் நண்பர்கள் அளித்திருக்கிறார்கள். வடநாட்டுச் செய்திகளைக் கேட்டும் படித்தும் வேதனையடைந்த உள்ளங்களுக்குத் தமிழ் நாட்டில் இத்தகைய தேசியப் பற்றும் தமிழன்பும் உள்ள முஸ்லிம்கள் பலர் இருக்கிறார்கள் என்பது குதூகலம் அளிக்கும் விஷயம்.

இது மட்டுமல்ல. பாரதி மண்டப நிதிக்குப் பணம் கொடுக்கும் காரியத்தை ஸ்ரீ கல்யாணராமய்யரும் ஜனாப் முகமத் சுலைமானும் ஒரு பெரிய திருவிழாவைப் போல் நடத்தினார்கள். பூர்வாங்கமாக நடந்த

சிற்றுண்டி விருந்துகளும், பொதுக் கூட்டத்தின் மேடை அமைப்பும், தீபாலங்காரமும், குழந்தைகளின் பாட்டும் நடனமும் எல்லாம் ஒரே வைபவமாக நடந்தன.

இந்த வைபவங்களுக் கெல்லாம் சாட்சியாகச் சென்னை ஷெரீப் ஸ்ரீ ராமசுவாமி நாயுடு அவர்களும், ஸ்ரீ சின்ன அண்ணாமலையும் வந்திருந்தார்கள். ஷெரீப் பதவிக்கு வந்ததிலிருந்து கணக்கற்ற உபசாரங்களுக்கு ஆளான ஸ்ரீ ராமசாமி நாயுடு அவர்கள் கூட ராணிப்பேட்டை உபசாரத்தைக் கண்டு பிரமித்துப் போய்விட்டார்! "பக்கத்திலே பார்த்தால் அண்ணாமலை! எதிரிலே பார்த்தால் பூமாலை! — எல்லாம் ஒரே மலைப்பா யிருக்கிறதே!" என்று சொல்லித் திகைக்கும்படி ராணிப்பேட்டை வாசிகள் செய்துவிட்டார்கள். கல்கத்தா தமிழர்களின் அன்பில் மூழ்கி விட்டுத் திரும்பி வந்த சின்ன அண்ணாமலைக்கும் ராணிப்பேட்டை வைபவம் ஒரே மலைப்பாகத்தான் இருந்தது.

ராணிபபேட்டையாரின் பண முடிப்பில் ஆற்காடு, வாலாஜா, அரக்கோணம் முதலிய பக்கத்து ஊர் வாசிகளின் நன்கொடையும் சேர்ந்திருந்த விவரத்தை நன்றியுடன் குறிப்பிடுகிறேன். நன்கொடை தந்தவர்களின் விவரமான ஜாபிதா அடுத்த இதழில் வெளியாகும்.

பாரதி பக்தியிலும் தமிழன்பிலும் ராணிப்பேட்டையை மிஞ்சக் கூடிய ஊர் வேறு எதுவும் தமிழ்நாட்டில் இல்லையா என்று பார்க்க வேண்டும்.

## பாரதி மண்டப நிதி

| | | | |
|---|---|---|---|
| இராணிப்பேட்டை ஸ்ரீ கே. ஆர். கல்யாணராம ஐயர் மூலம் வசூல் (விவரம் அடுத்த இதழில்) ரூ. | 2379 | 0 | 3 |
| ஞானாம்பிகா மில்ஸ் லிமிடெட், கோயமுத்தூர் | 100 | 0 | 0 |
| ஆசிரியர், "கல்கி" (ராணிப்பேட்டை அன்பர்கள் பரிசளித்த பேனாவின் விலை) | 63 | 0 | 0 |
| தேனி நாடார் சரஸ்வதி ஹைஸ்கூல் முதல் பாரம்—ஆறாம்பாரம் மாணவர்கள் | 52 | 0 | 0 |
| ஸ்ரீ கான கலாதர மதுரைமணி அய்யர் | 51 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். எம். பழநிசாமி, திணைத்துக்கடவு பிர்கா விவசாயிகள் சங்கம், சிங்காரம் பாளையம், திணைத்துக்கடவு | 50 | 0 | 0 |
| ஸ்ரீ கல்பாத்தி ராமநாதன், மிருதங்க வித்வான், சென்னை | 25 | 0 | 0 |
| ரெங்கூன், இந்திய சுதந்திர தின விழா வைபவ அன்பர்கள் (ஸ்ரீ கே. ராமமூர்த்தி ராஜன் மூலம்) | 13 | 0 | 0 |
| தேனி நாடார் சரஸ்வதி ஹைஸ்கூல் உத்தியோகஸ்தர்கள் | 10 | 8 | 0 |
| ஸ்ரீமதி ஆர். நீலலோசனி, நாகப்பட்டினம் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ பாரதி லேபர் டின் மானுபாக்சரிங் கம்பெனி, சென்னை | 10 | 0 | 0 |
| ஸ்ரீ பி. எம். வெங்கட கிருஷ்ணன், சங்கீத வித்வான், மதுரை | 10 | 0 | 0 |
| திருச்சி டியூடோரியல் கல்லூரி மாணவர்கள் | 8 | 0 | 0 |
| ராஜாஜி வாலிபர் சங்கம், கயத்தூர், தஞ்சாவூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ டி. ஆர். ஜே. தங்கையா, புண்டுலோயா, சிலோன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. பி. சோமசுந்தரம் நாடார், மறம்பொலா, சிலோன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆ. சாலமோன் பன்னபெட்டியா, சிலோன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆ. பால்சாமி, பன்னபெட்டியா, சிலோன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆ. லெட்சுமணன், பன்னபெட்டியா, சிலோன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். ஷண்முகவேலு பிள்ளை, முடிக்தாரேந்தல் புதூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். கோவிந்தராஜ், ஒரத்தநாடு | 5 | 0 | 0 |
| ஸ்ரீ டி. கே. சுப்பிரமணியம், கல்வி ஏஜண்ட், தஞ்சாவூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ கே. வி. ஆர். சந்திரன், யுனைடெட் இந்தியா, பம்பாய் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ செ. சுப்ரமணியம், வேலணை, சிலோன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். கே. ராமச்சந்திர அய்யர், பி. ஏ. எல். டி. ஹெட். எம். வி. டி. ஸ்கூல், சென்னை | 5 | 0 | 0 |
| (விட்டலபுரம் ஸ்ரீ வெங்கடாசாரியார் மூலம் ரூ. 111-க்கு விபரம்) | | | |
| ஸ்ரீ த. செந்திப் பெருமாள், பேரூர் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ க. ப. காதர் மொஹைதீன் லெப்பை, செய்துங்கநல்லூர் | 15 | 0 | 0 |
| ஸ்ரீ சுந்தசாமி நாடார், விட்டலபுரம் | 11 | 0 | 0 |
| ஸ்ரீ நாராயணன் பண்டாரம், விட்டலபுரம் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. ராஜாங்க மய்யங்கார், விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ராமஸ்வாமி அய்யர், விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஆவுடையப்பன், விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ அய்யாத்துரைக் கோனார், செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ சிவசுப்ரமண்ய ஓதுவார், செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ராமானுஜம், ஆழ்குடி | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி ஆதிலெக்ஷ்மி அம்மாள், விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ டி. எஸ். கணபதி, அனவரதநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ காதர்மீரு பிள்ளை, செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எம். ஏ. கனி, செய்துங்கநல்லூர் | 5 | 0 | 0 |
| இதர வசூல் | 1 | 12 | 0 |
| ஆக ரூ. | 2954 | 4 | 3 |
| ஏற்கெனவே வசூல் ரூ. | 19,682 | 13 | 3 |
| ஆகமொத்தம் ரூ. | 22,637 | 1 | 6 |

ராணிப்பேட்டையில் சென்னை ஷெரிப் ஸ்ரீ ராமசாமி நாயுடு அவர்கள் தலைமையில் நடந்த கூட்டத்தில் பாரதி மண்டப நிதிக்கு ரூபாய் இரண்டாயிரத்துச் சொச்சம் அளிக்கப்பட்டது

• • •

லார்ட் கிளைவ் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு அஸ்திவாரம் இட்ட ஆற்காடு கோட்டை வாசல்.

• • •

பாரதி நிதி அளிப்புக்குத் திரு விழாவைப்போல் மாபெரும் கூட்டம் கூடியிருந்தது.

• • •

சரித்திரத்தில் இடம் பெற்ற ஆற்காடு கோட்டையின் நடுவில் இன்று சுதந்திரக் கொடி கம்பீரமாகப் பறக்கிறது!

• • •



# 1947-ம் வருஷத்துக் "கல்கி" சிறுகதைப் போட்டி

## முடிவு தேதி 30—9—47

○

முதற் பரிசு:

**ரூ. 500**

இரண்டாவது பரிசு:

**ரூ. 100 வீதம் ஐந்து கதைகளுக்கு**

●

### நிபந்தனைகள்

1. இந்தப் போட்டிக்கு அனுப்பும் கதைகள், தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட புதுக் கற்பனைகளாக இருக்க வேண்டும். ஏற்கனவே வெளியான கதைகளும், மொழி பெயர்ப்புகளும், தழுவி எழுதிய கதைகளும் இந்தப் பரிசுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட மாட்டா.

2. கதையின் நீளம் "கல்கி"யில் ஐந்து பக்கம் முதல் பன்னிரண்டு பக்கத்துக்குள் அடங்குவதாயிருக்க வேண்டும்.

3. ஒர் ஆசிரியர் இரண்டு கதைகள் அனுப்பலாம்; அதற்கு மேல் அனுப்பக் கூடாது.

4. சென்ற 1946-ம் வருஷத்துப் போட்டிக்கு அனுப்பப் பரிசு பெறாத கதைகளைத் திருப்பவும் அனுப்பக் கூடாது. அப்படித் திருப்பும் கதைகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட மாட்டா.

5. 1947-ம் வருஷம் செப்டம்பர் 30-க்குள் கதைகள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின் மேல் "சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

6. எல்லாவற்றிலும் சிறந்ததென்று பரிசோதகர் கருதும் கதைக்கு முதல் பரிசு ரூ. 500 அளிக்கப்படும். அடுத்தபடியாக ஐந்து கதைகளுக்கு ஒவ்வொன்றுக்கும் ரூ. 100 வீதம் அளிக்கப்படும். பரிசு பெறுங் கதைகளின் 'காபிரைட்' உரிமை "கல்கி" காரியாலயத்தைச் சேர்ந்தது.

7. பரிசு பெறாத கதைகளில் பிரசுரத்துக்குத் தகுதியான கதைகள் பிரசுரமாவதற்கு எடுத்துக் கொள்ளப்படும். அவற்றுக்கு உரிய சன்மானம் வழங்கப்படும்.

8. முதற் பரிசு பெற எந்தக் கதையும் தகுதியற்றதென்று பரிசோதகர் கருதினால், பரிசுத் தொகை பரிசோதகரின் கருத்துப் போல பிரித்துக் கொடுக்கப்படும்.

9. இந்தப் போட்டி சம்பந்தமான விதிகளை மாற்றவும் திருத்தவும் "கல்கி" ஆசிரியருக்கு உரிமை உண்டு.

10. சந்தேகம் ஏற்படும் எந்த விஷயத்திலும் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

**மானேஜர், "கல்கி",**
**கீழ்ப்பாக்கம், சென்னை**

# ஆனந்த நகரம்

கல்கி

இந்த வாரத்தில் கல்கத்தாவிலிருந்து வந்த செய்திகள் இந்தக் கட்டுரையைத் தொடர்ந்து எழுதுவதற்கு உற்சாகமில்லாமல் செய்துவிட்டன. நான் பார்த்த ஆனந்த நகரம் எங்கே? இப்போது பத்திரிகைச் செய்திகள் வர்ணிக்கும் அமர்க்கள நகரம் எங்கே?

எனினும், கல்கத்தாவில் இப்போது திடீரென்று தோன்றியிருக்கும் பகைமை வெறியும் குத்தும் கொலையும் தற்காலிக சம்பவங்கள் என்று மனதை ஒருவாறு சமாதானப்படுத்திக் கொண்டு மேலே எழுதுகிறேன். கூடிய சீக்கிரத்தில், "கல்கத்தா பழைய ஆனந்த நகரமாகி விட்டது. காந்தி மகாத்மா உண்ணாவிரதத்தை நிறுத்தி உணவு அருந்தி விட்டார்" என்ற செய்தி வரும் என்று எதிர்பார்த்துக் கட்டுரையைத் தொடர்ந்து எழுதுகிறேன்.

• • •

ராஜாஜி எங்கே கடைசி நிமிஷத்தில் நீதிபதி மித்தர் கேட்ட கேள்விக்குப் பதிலாக, "கவர்னர் பதவி வகிக்க இஷ்டமில்லை" எனச் சொல்லி விடுவாரோ என்று நான் கவலைப் பட்டதாகக் குறிப்பிட்டேனல்லவா? இப்படிக் கவலைப் பட்டதற்குக் காரணம் வங்காளத்தின் மேல் எனக்குள்ள அளவில்லாத பக்தியும் அன்பும் அநுதாபமுந்தான்.

வங்காளத்துக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்; தமிழ் நாடும் கடமைப்பட்டிருக்கிறது. பல துறைகளிலும் தமிழ் மக்கள் வங்காளத்துக்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

நமது காலத்தில் தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கும் சமயப் பற்று, தேசிய உணர்ச்சி, இலக்கிய மலர்ச்சி ஆகியவற்றுக்கெல்லாம் வங்கநாட்டுப் பெரியோர்களே காரணமாவார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், சுவாமி விவேகானந்தர் ஆகியவர்களுடைய சமய சம்பந்தமான பொன் மொழிகள் தமிழ் நாட்டில் சமய உணர்ச்சி அடியோடு மறையாமலிருப்பதற்குப் பெரிதும் உதவி செய்திருக்கின்றன. ஆங்கிலம் படித்த கூட்டத்தாரிடையிலும், அந்தக் கூட்டத்தின் செல்வாக்குக்கு உட்பட்டவர்களிடையிலுந்தான் சொல்கிறேன். தமிழ் நாட்டுப் படித்த வகுப்பாரில் அநேகர் அடியோடு நாஸ்திகராய்ப் போகாமலிருந்ததற்குக் காரணம் ஸ்ரீ பரமஹம்ஸரும் சுவாமி விவேகானந்தருந்தான்.

திருவல்லிக்கேணிக் கடற்கரையில் ஸ்ரீ விபினசந்திர பாலர் செய்த இடிமுழக்கப் பிரசங்கங்கள் அரசியலில் பெருந் தூக்கம் தூங்கிக்கொண்டிருந்த தமிழ் நாட்டைத் தட்டி எழுப்பி ஆவேச வெறி கொள்ளச் செய்தது என்பது சரித்திர பூர்வமான உண்மையாகும்.

அவ்விதமே ஸ்ரீ சுரேந்திரநாத் பானர்ஜி, ஸ்ரீ ராஷ் பிஹாரி கோஷ், ஸ்ரீ மோதிலால் கோஷ் ஆகியவர்கள் பழைய காலத்திலும், தேசபந்து தாஸ் ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் ஆகியவர்கள் பிற்காலத்திலும் தமிழ் நாட்டின் தேசிய எழுச்சிக்குப் பெரிதும் காரணமாயிருந்திருக்கிறார்கள்.

இலக்கியத் துறையில் ஸ்ரீ பங்கிம் சந்திர சட்டர்ஜியும் டாக்டர் ரவீந்திரநாத தாகூரும் தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டிருக்கிறார்கள்.

ஸ்ரீ ராமானந்த சட்டர்ஜியின் 'மாடர்ன் ரிவ்யூ'வைப் போல் மாத சஞ்சிகை நடத்த வேண்டுமென்ற ஆசையைப் பகிரங்கமாக வெளியிட்டுக் கொண்டு தமிழில் எத்தனை பத்திரிகைகள் ஆரம்பமாகி யிருக்கின்றன?

சுதந்திரப் போராட்டத்துக்கு வலிவும் உற்சாகமும் அளித்த "வந்தேமாதரம்" "ஜெ ஹிந்த்" என்னும் இரண்டு மாபெரும் கோஷங்களும் வங்க நாட்டில் தோன்றியவையே யாகும்.

இப்படி யெல்லாம் சென்ற ஐம்பது வருஷமாக வங்காளத்துக்குச் சென்னை மாகாணம் எத்தனையோ விதத்தில் கட-



கல்கத்தாவில் ஹாவ்ரா என்னும் பகுதியிலுள்ள தமிழர்களும் ஆகஸ்டு 15ல் சுதந்திரத் திருநாளைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். தமிழ்க் குழந்தைகள் அணிவகுத்துச் சுதந்திரக் கொடி பிடித்து நின்று பாரதி கீதம் பாடுகிறார்கள்.

மைப்பட் டிருக்கிறது. "அவ்விதம் பட்ட கடனை யெல்லாம் இன்று ராஜாஜியைக் கவர்னராகக் கொடுத்த ஒரே காரியத்தினால் சென்னை மாகாணம் தீர்த்துக் கொண்டு விட்டது!" என்று கல்கத்தாவில் ஆகஸ்டு 10ல் நடந்த தமிழர்களின் மாபெரும் கூட்டம் ஒன்றில் நான் சொன்னேன். மனதில் பரிபூரணமாக நம்பித்தான் சொன்னேன். கல்கத்தா தமிழர்களும் அதை முழு மனதுடன் ஆசரித்தார்கள் என்று அவர்களுடைய பலமான கரகோஷத்தின் மூலமாகத் தெரிந்தது.

ஆனால் நான் சொல்லி என்ன பயன்? கல்கத்தா தமிழர்கள் ஆமோதித்துத்தான் என்ன பயன்? வங்காளிகள் அதை ஆமோதிப்பார்களா? ராஜாஜி தங்களுக்குக் கவர்னராகக் கிடைத்தது ஒரு பெரிய பாக்கியம் என்பதை வங்காளிகள் உணர்ந்திருக்கிறார்களா? அல்லது இனியேனும் உணர்ந்து கொள்வார்களா?

இதைப் பற்றி எனக்கும் மற்றத் தமிழ் நண்பர்களுக்கும் மிகவும் சந்தேகமாய்த்தானிருந்தது. அந்த சந்தேகம் வரவரக் குறைவதற்கான பல அத்தாட்சிகள் கிடைத்தன.

சாந்தினிகேதனத்தில் கவியரசர் புதல்வர் ஸ்ரீ ரதீந்திர நாத் தாகூர் பொதுக் கூட்டத்தில் பகிரங்கமாக இதைச் சொன்னார். "சுதந்திர வங்காளத்தின் முதல் கவர்னராக ராஜாஜி வந்திருப்பது நம்முடைய பாக்கியம்" என்று கூறினார்.

மற்றும் நாங்கள் பேசிப் பழக நேர்ந்த பத்திரகர்களும் அறிவாளிகளுமான வங்காளிகள் எல்லாருமே மேற்படி அபிப்பிராயத்தைத் தெரிவித்தார்கள்.

பல வருஷ காலமாக வங்காளத்தின் அரசாங்க நிர்வாக இயந்திரம் பல விதத்திலும் சீர்குலைந்து போயிருக்கிறது. மேற்கு வங்காளத்துக்குப் புதிதாக வந்திருக்கும் காங்கிரஸ் மந்திரிகளோ ஏற்கெனவே அரசாங்க நிர்வாகத்தில் அநுபவம் இல்லாதவர்கள். எனவே, ராஜாஜியைப் போன்ற ஒருவர் இச்சமயம் கவர்னராகக் கிடைத்தது பெரும் பாக்கியம் என்பதாகவே வங்காளிகள் பலரும் கருதுகிறார்கள்.

மற்றவர்களின் மனப்போக்கு எப்படியிருந்தாலும் வங்காளத்து மந்திரிகளும், முக்கியமாகப் பிரதம மந்திரிடம் ராஜாஜியைப் பெரிதும் மதிப்பவர் என்பது அன்றிரவே எங்களுக்குத் தெரிவதற்கான சந்தர்ப்பம் ஏற்பட்டது.

• • •

கவர்னர் பதவி ஏற்பு வைபவம் சுமார் இரண்டு மணிக்கு முடிவுற்றதும், சோமாஜுலும் பாதகமில்லையென்று தமிழ் நாட்டின் சார்பாக ராஜாஜிக்கு வாழ்த்துக் கூறுவதற்காகக் கவர்னர் மாளிகையில் அவர் இருந்த பகுதியைத் தேடிப் போனேம். (வெகு தூரத்துக்கு வெகு தூரம் விஸ்தாரமாயிருந்த அந்த மாளிகையில், ஒவ்வொன்றும் ஒரு பெரிய வீட்டின் விசாலமுள்ள பல ஹால்களும் அறுபது அறைகளும் உள்ள அந்த அரண்மனையில், ராஜாஜி இரண்டாவது அறையில் தமது ஜாகையை வைத்துக் கொண்டிருந்தார் என்பதை இங்கே குறிப்பிட்டு வைக்கிறேன்.)

நாங்கள் போகும்போது வழியில் காணப்பட்ட டபேதார்கள், சேவகர்கள் முதலியோர் கைகட்டி நமஸ்கரித்ததைப் பார்த்ததும் ஸ்ரீ வி. என். ராஜனுக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. "இங்கிலீஷ் முறையில் ஸல்யூட் செய்யாமல் இந்திய முறையில் இவர்கள் கும்பிடு போடுவதைக் கண்டேனே; என் வாழ்நாளில் இது ஒன்றே போதும்!" என்றார்.

மச்சப்படி ஏறி ராஜாஜியின் அறைக்குச் சென்றதும் அங்கு ஏற்கெனவே பிரதம மந்திரி டாக்டர் பி. ஸி. கோஷ் வந்து புது கவர்னருடன் பேசிக்கொண்டிருந்ததை அறிந்தோம். அதனால் பாதகமில்லை என்று உள்ளே சென்றோம். அப்போது ஒரு விஷயம் நன்றாய்த் தெரிந்தது. வங்காளத்தில் மற்ற யாருடைய அபிப்பிராயம் எப்படியிருந்தபோதிலும் பிரதம மந்திரி டாக்டர் கோஷுக்கு ராஜாஜியிடம் அசாத்திய மரியாதை என்பதைக் கண்டோம். அவருக்கு எங்களை ராஜாஜி அறிமுகம் செய்து வைத்தபோது, "ஓ! எனக்குத் தெரியுமே? இவர்களுக்குத்தானே நான் இன்றைய வைபவத்துக்கு டிக்கட் கொடுத்தேன்?" என்றார்.

இதன் விவரம் என்னவென்றால், அன்றைய கவர்னர் பதவி ஏற்பு வைபவத்துக்கு வருவதற்கு மிகச் சிலருக்கே அநுமதிச் சீட்டு வழங்கப்பட்டிருந்தது. சுமார் நூறு பேருக்கு மேலிராது. கல்கத்தாவில் அப்போது குடிகொண்டிருந்த நிலைமையை



கல்கத்தா தமிழர்களின் சுதந்திரக் கொண்டாட்டத்தின்போது ரசிகமணி டி. கே. சி. அவர்கள் சுதந்திரம் பெற்ற பாரதத் தாய்க்குப் பரிசு அளித்துமகிழ்கிறார்.



நாமக்கல் கவிஞர் கீதங்களினால் கல்கத்தா நகரத்தைப் பரவசப்படுத்திய ஸ்ரீ சின்ன அண்ணாமலையின் காதில் சங்கநாதம் கேட்குது!

யும், எதிர்பார்க்கப்பட்ட நிலைமையையும் முன்னிட்டுப் பிரதம மந்திரி டாக்டர் கோஷ் டிக்கட் கொடுக்கும் பொறுப்பைத் தாமே வைத்துக் கொண்டிருந்தார். எனவே எங்கள் பெயர்களும் பிரதம மந்திரி வரையில் போக வேண்டியிருந்தது. சென்னையிலிருந்து இன்ன காரியத்துக்காக வந்தவர்கள் என்பதையும், ராஜாஜிக்குத் தெரிந்தவர்கள் என்பதையும் வற்புறுத்திச் சொல்லியே டிக்கட் வாங்க வேண்டியிருந்தது. எப்படியோ, டிக்கட் கொடுத்தாரே! அவர் நன்றாயிருக்கட்டும்! அவர் ஆட்சியில் வங்காளம் சுபிட்சமாயிருக்கட்டும்!

• • •

ராஜாஜி வேண்டா விட்டாலும் அவருக்கு எங்களுடைய வாழ்த்தைக் கூறிவிட்டு, ஸ்ரீமதி கி.எஸ். சக்கராயி அன்றிரவு 12 மணிக்கு விநாயகருக்குப் பூஜைசெய்து 108 தேங்காய் உடைத்து "இந்தியாவின் சுதந்திரம் விக்னம் இல்லாமல் நடக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டு அனுப்பிய பிரசாதங்களையும் கொடுத்து விட்டுக் கிளம்பினோம்.

இரவு இரண்டரை மணிக்குக் கல்கத்தா நகரம் தூங்கவில்லையென்பதையும் ஒரே கோலாகலமாயிருப்பதையும் கண்டோம். எங்கே பார்த்தாலும் ஜே கோஷம். "வந்தேமாதரம்" "ஜே ஹிந்த்" என்ற இரு முழக்கங்களும் காது செவிடுபடச் செய்தன. இந்த இரண்டு கோஷங்களுடன் இன்னொரு மூன்றாவது கோஷமும் கிளம்பிற்று. முதலில் அது விவரமாகத் தெரியவில்லை. அப்புறம் கவனித்துக் கேட்டோம். "ஹிந்து முஸ்லிம் ஏக் ஹோ!" என்பதுதான் அந்த மூன்றாவது கோஷம் என்று தெரிந்தது. ஆம்; அங்கங்கே ஹிந்துக்களும் முஸ்லிம்களும் கும்பல் கும்பலாக நின்று மேற்கண்டவாறு கோஷமிட்டார்கள். கூட்டத்தின் நெருக்கம் காரணமாக எங்கள் வண்டி நின்றபோதெல்லாம் ஜனங்கள் எங்களையும் அப்படிக் கோஷமிடச் சொன்னார்கள். "இது என்ன அற்புதம்! என்னால் நம்பவே முடியவில்லையே" என்றார் ஸ்ரீ வி.என். ராஜன். எங்களுக்கு நம்ப முடியாமல்தானிருந்தது. "இங்கே இப்படி இருக்கிறது. மற்ற இடங்களிலெல்லாம் குத்தும் கொலையும் நடந்து கொண்டிருக்கலாம்!" என்றும் எண்ணினோம். மறுநாள் காலையில் எழுந்து 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகையைப் பார்த்த பிறகுதான், முதல் நாளிரவு நாங்கள் கண்ட காட்சிகள் எல்லாம் உண்மையே என்று நம்ப வேண்டியதாயிற்று. அவை நம்ப முடியாத காட்சிகள் தான் என்பதும் மேற்படி பத்திரிகை ரிப்போர்ட்டிலிருந்து தெரிய வந்தது.

இந்த அற்புதத்திற்கு மகாத்மா காந்திதான் காரணம், மகாத்மா ஒருவரே காரணம் என்று எல்லாரும் சொல்லியிருக்கிறார்கள்; ராஜாஜியும் சொல்லியிருக்கிறார். ஆயினும் மகாத்மாவின் அற்புத சக்தியோடு, ராஜாஜி கல்கத்தாவில் கால் வைத்த வேளையின் மகிமைக்கும் அதில் ஒரு பங்கைக் கொடுக்க வேண்டுமென்று நான் நினைத்தேன். 13உ கூட கல்கத்தாவில் ஏகக் கலாட்டாவாகத்தான் இருந்தது. 14உ மத்தியானம் ராஜாஜி விமானத்தில் வந்து இறங்கினார். பழைய கவர்னர் பர்ரோஸ், பழைய பிரதம மந்திரி டாக்டர் சுஹ்ராவர்த்தி, புதிய பிரதம மந்திரி டாக்டர் பி. ஸி. கோஷ் ஆகியவர்கள் விமான கூடத்துக்குச் சென்று ராஜாஜியை அழைத்து வந்தார்கள்.

அதன் பிறகுதான் கல்கத்தா முஸ்லிம் க், மறுநாள் 15உ சுதந்திரக் கொண் ாட்டத்தில் முஸ்லிம்களும் கலந்து காள்ள வேண்டுமென்று தீர்மானித்தது.

அவ்வளவுதான்! முஸ்லிம் லீக் கட்டுப் ாட்டின் மகிமையை என்னவென்று சால்வது? அன்று இரவுக்கிரவே பத்து ட்சம் முஸ்லிம்கள் வசித்த வீடுகள் ல்லாம் தேசியக் கொடிகளினால் அலங் கரிக்கப்பட்டன. முஸ்லிம்கள் கூட்டம் ட்டமாயும் லாரிகள் — மோட்டார்களில் றிக்கொண்டும் "ஜே ஹிந்த்!" கோஷம் ட்டுக் கொண்டு கிளம்பினார்கள். தைப் பார்த்ததும், உணர்ச்சி வேகம் டைய வங்காளி ஹிந்துக்களின் மனமும் டனே மாறிவிட்டது. இரு தரப்பிலும் ஹிந்து — முஸ்லிம் ஏக் ஹோ!" என்ற காஷம் ஏக காலத்தில் கிளம்பிற்று. ந்துக்களும் முஸ்லிம்களும் ஒருவரை ாருவர் கட்டிக் கொள்ளவும் கூத்தாட ம் ஆரம்பித்து விட்டார்கள்!

மறுநாள் பகலும் இரவும் கல்கத்தா ஒரே ல்லோல கல்லோலப்பட்டது.

15உ இரவு பர்ரா பஜாரில் நாங்கள் ஏறி ருந்த மோட்டார் ஒரு மைல் தூரம் போக ன்று மணி நேரம் ஆயிற்று. வழியில் ல இடங்களில் முஸ்லிம்கள் எங்கள் ண்டியை நிறுத்தி, மோட்டாரின் தவைப் பலாத்காரமாகத் திறந்து, கள் மேல் பன்னீரை ஊற்றினார்கள்!

சில காலத்துக்கு முன்பு ஹிந்துக்களின் மீது க்கினித் திராவகத்தை ஊற்றிய கைவி ல்தான் இப்போது நாங்கள் சொட்ட னயும்படி பன்னீரை ஊற்றினார்கள்......

அடடா! அதை யெல்லாம் இப்போது னைத்து என்ன பயன்? எல்லாம் ண்டு வாரத்து இன்பக் கனவாக லலவா போய்விட்டது?

இப்போது ஏற்பட்டிருக்கும் தொல்லை ருக்கெல்லாம் காரணம் வங்காளி ஹிந் க்களும் வங்க முஸ்லிம்களும அல்ல; னி மாகாணங்களிலிருந்து வந்தவர்கள் ன் வேண்டு மென்று கலகங்களைக் ப்புகிறார்கள் என்று சிலர் சொல்லு து எனக்கு நம்பத் தோன்றுகிறது! றா! இதுவே உண்மையாயிருக்கக் டாதா?

• • •

மறுநாள் காலையில் மறுபடியும் கவர்னர் மாளிகைக்குச் சென்றோம். எட்டு மணிக்கு நடைபெற இருந்த கொடியேற்று விழா வைப் பார்ப்பதற்காகத்தான். இந்த விழா வுக்குச் சுமார் முந்நூறு பேர் உள்ளே வர அனுமதிக்கப்பட்டிருந்தார்கள்.

குறிப்பிட்ட நேரத்தில் கவர்னர் ராஜாஜி வந்து சேர்ந்தார். அணிவகுத்து நின்ற படைகளைப் பார்வையிட்டார். கொடியை உயர்த்திப் பறக்கவிட்டார். உடனே இருபத்தோரு குண்டுகள் போடப்பட்டன. தேசிய கீதங்கள் பாடப்பட்டன.

இந்த இரண்டும் நடந்து கொண்டிருந்த போதே, சமுத்திரம் பொங்கி வருவது போல் ஓர் இரைச்சல் கேட்டது. இரைச்சல் கேட்ட திசையை நோக்கினேன். பூட்டிப் போடாமல் சும்மாச் சாத்தியிருந்த கேட் கதவுகளைத் தள்ளித் திறந்துகொண்டு ஜனங்கள் திமுதிமு வென்று உள்ளே வந்து கொண்டிருந்தார்கள். இத்தனை காலமாகத் தேடிக் கொண்டிருந்த சுதந்திரத்தை அவசரமாய்க் கைப்பற்றுவதற்காகவே அவர்கள் விரைந்து ஓடி வருவதாகத் தோன்றியது!

அணி வகுத்து நின்ற படைவீரர்கள் மேற்படி காட்சியைக் கண்டு, திகைத்தார்கள். ராஜாஜிக்கு இருபுறமும் நின்ற போலீஸ் அதிகாரிகள் பிரமித்தார்கள்.

உள்ளே ஓடி வருகிறவர்களைத் தடுத்து வெளியில் தள்ளவேண்டும் என்றும்

ஸ்ரீ வி. என். ராஜன் ஐ. சி. எஸ்.



எண்ணம் அவர்களில் பலருக்கும் அப்போது தோன்றி யிருக்கக் கூடும். ஆனால் அப்படி ஏதாவது செய்திருந்தால் அதன் பலன் விபரீதமாக முடிந்திருக்கும்.

ராஜாஜி ஜனங்களைத் தடுக்க வேண்டாம் என்று உத்தரவு போட்டார்.

வந்த ஜனங்கள் கொடிமரத்துக்கு முன்னால் தரையில் உட்கார்ந்தார்கள். தேசிய கீதத்தைக் கேட்டார்கள.

கீதம் முடிந்ததும் ராஜாஜி மாளிகைக்குச் சென்றார். அவரைத் தொடர்ந்து ஜனங்களும் சென்றார்கள்.

முதலில் ஜனங்கள் நூற்றுக் கணக்கில் வந்தார்கள்; அப்புறம் ஆயிரக் கணக்கில் வந்தார்கள்; பிறகு பதினாயிரக் கணக்காயிற்று. கடைசியில், சுமார் இரண்டு லட்சம ஜனங்கள் கவர்னர் மாளிகைக் காம்பவுண்டில் குவிந்து விட்டார்கள்.

ஒரு சிலர் துணிச்சலுடன் கவர்னர் மாளிகைக்குள்ளே பிரவேசித்தார்கள். அவ்வளவுதான்! வெளியல் நின்ற அத்தனை பேரும் மாளிகைக் குள்ளே புகத் தொடங்கி விட்டார்கள். சிலர் ஜன்னல்களின் வழியாக ஏறி உள்ளே குதித்தார்கள்.

மாளிகையின் கீழ்ப் பகுதி, மேல்மாடி, அதற்கு மேல் மாடி—எல்லா இடங்களிலும் ஜனஙகள் நிறைந்து விட்டார்கள்.

பூச் சட்டிகள் உடைந்தன; கண்ணாடிகள் நொறுங்கின; நாற்காலிகள் உருண்டன; சோபாக்கள் புரண்டன.

சிறை உள்ள இடத்தைக் கண்டு பிடித்து விட்டு உற்சாகத்துடன் திரும்பிய வானரங்கள் மதுவனத்தில் புகுந்தபோது செய்த காரியங்களைக் கல்கத்தா ஜனங்கள் கவர்னர் மாளிகையில் செய்தார்கள்.

மனுஷர்களோடு மனுஷர்கள் முட்டிக் கொண்டார்கள். சிலர் தூண்களைக் கட்டிக் கொண்டார்கள். புஷ்ப ஜாடிகளைப் போட்டு உடைத்தார்கள். சோபாக்களில் புரண்டு உருண்டார்கள். மேஜைகளின் மேல் ஏறி நின்று குதித்தார்கள். எதிரில் கண்ணாடி இருப்பது தெரியாமல் நடந்து கண்ணாடிகளைச் சுக்கு நூறாக்கினார்கள்.

இப்படியெல்லாம் அமளி துமளிப் பட்டுக் கொண்டிருக்கையில் கவர்னர் ராஜாஜி 9 மணிக்குச் சட்ட சபைக்குப் போய்ப் பிரசங்கம் செய்ய வேண்டி யிருந்தது.

எப்படி வெளியே போகிறது! வாசலிலோ எள் போட்டால் தரையில் விழாத கூட்டம். மோட்டார் வண்டி வந்து நின்றவுடனே கூட்டம் அதிகமாயிற்று.

இவ்வளவு ஜனங்களுக்கு மத்தியில் காரில் ஏறிக்கொண்டு விரைந்துபோவதை ராஜாஜி விரும்பவில்லை. எனவே, காரை தூரமாகக் கொண்டு போய் நிறுத்தச் சொல்லி விட்டார். கார் போன சற்று நேரத்துக் கெல்லாம் ராஜாஜி வந்தார். "ராஜாஜிக்கு ஜே!" என்ற கோஷம் கிளம்பியது. எல்லாரையும் கையமர்த்தி உட்கார வைத்து விட்டு, ராஜாஜி ஜனக் கூட்டத்தினிடையே புகுந்து மளமளவென்று விரைந்து சென்றார். கார் நின்ற இடம் வரையில் அவர் பின்னால் ஜனங்கள் ஓடினார்கள். எனினும் ராஜாஜி விரைந்து நடந்து சென்று, அங்கே காரில் ஏறிக்கொண்டு போய்விட்டார்.

ஆனால் நாங்கள் அவ்விதம் கூட்டத்தில் புகுந்து போக முடியாமல் பின் தங்கி விட்டோம். கொஞ்சம் கூட்டத்தில் கலைசல் ஏற்படட்டும் என்று அரை மணி காத்திருந்துவிட்டுப் புறப்பட்டோம். நாங்கள் சட்ட சபை மண்டபம் போய்ச் சேர்ந்த போது அங்கேயும் ஜனங்கள் ஏராளமாய்ப் புகுந்து விட்டார்கள் என்று தெரிந்தது. மண்டபத்துக்குள்ளே போக முடியாத காரணத்தினால் மேல் மச்சில் ஏறினோம்.

நல்ல வேளையாக அங்கே ஒரு நல்ல ஹோட்டல் இருந்தது. ஹோட்டலில் ரஸகுல்லாவும் இருந்தது. தலைக்கு மூன்று ரஸகுல்லா சாப்பிட்டு இந்தியா சுதந்திரமடைந்த தினத்தைக் கொண்டாட தீர்மானித்தோம்.

அடாடா! வங்காளம் என்றால் வங்காளம் தான். கல்கத்தா என்றால் கல்கத்தாதான். ரஸகுல்லா என்றாலும் ரஸ குல்லாதான்.

வங்காளிகளைப்போல் தேச பக்தர்களும் கிடையாது. அவர்களைபோல் ரஸிகர்களும் கிடையாது. ரஸகுல்லாவைப் போல் நயமான இனிப்புப் பண்டமும் கிடையாது.

சென்னை மாகாணத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண - விவேகானந்தர் கொள்கைகள் இவ்வளவு அதிகம் பரவி இத்தனை மடங்கள் ஏற்பட்டிருப்பதற்கு ஒரு முக்கிய காரணம் ரஸகுல்லாதான் என்று நினைக்கிறேன்.

இந்த இனிப்பான கட்டத்திலேயே கட்டுரையை நிறுத்திவிட்டால் என்ன? ரொம்ப சரி; நிறுத்த வேண்டியதுதான். கல்கத்தாவில் அமைதி நிலவும் செய்தி வந்த பிறகு மற்ற விஷயங்களைப் பார்த்துக் கொள்ளலாம்.

வந்தே மாதரம்! ஜெய் ஹிந்த்!!

# தசரா வெளியீடு

ஸ்ரீ ஜகதீஷ் பிலிம்ஸ்

# ராமதாஸ்

தமிழ்

டைரக்டர்... Y. V. ராவ்

ஸ்டுடியோ
நியூ தியேட்டர்ஸ் ஸ்டுடியோஸ்
கல்கத்தா

Y. V. ராவ்
குமாரி ருக்மணி
கனக்காடு ராமநாராயண அய்யர்
வைத்யநாராயணன்
ரங்கஸ்வாமி
மாஸ்டர் சேதுராமன்
மாஸ்டர் ஸ்ரீநிவாசன்
ரங்கநாயகி
ஜெயகேஸரி
பேபி ராதா

மற்றும் பலர் நடித்தது

பாட்டு:
பாபநாசம் சிவன்

சங்கீத டைரக்ஷன்:
C. R. சுப்பராம்

விவரங்களுக்கு:

## ஸ்ரீ ஜகதீஷ் பிலிம்ஸ் லிமிடெட்

மதராஸ் 17 :: போன்: 88326

# இந்தியாவின் மிகப் பிரபல ஔஷதம்

## லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம்







**வலியை விரைவில் போக்கடிப்பது!**

நரம்பு நோய், கீல் வாயு, வாயுப் பிடிப்புகள், பல்வலி, சுளுக்கு அல்லது தலைவலி நீங்க மிகச் சிறந்ததான இந்த லிட்டில்ஸ் ஓரியண்டல் பாமை வாங்குங்கள். அதனால் அதிகப்படி செலவில்லை.

தயாரிப்பவர்கள்: லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம் & பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்
தபால் பெட்டி நெ. 67 :: மதராஸ்

DJK 19

---

## பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்

## மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்

**5,00,000 நூற்கும் கதிர்கள். நம்பர் 80 வரை நூல்கள்.**

எங்களுடைய விசேஷமான நூல்கள்: ஒற்றை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக் கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

நாங்கள் சப்ளை செய்வது: கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காசிக்கள் நூல்கள். இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங், காளவாஸ் முதலியவைகளுக் கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான ஒன்றை நூல்கள் எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப் போல் எல்லா வகையிலும் சித்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை. ஐக்கிய மாகாண சர்க்கார் தங்கள் அறிக்கையில், இந்தியாவிலே நூற்கப்படும் நூல்களில் எங்கள் நூல்கள் மிருதுத் தன்மைக்கும் ஒன்றாய் நிற்கும் சேர்த்திக்கும், அழுத்தத்திற்கும் மிகச் சிறந்தவை யென்றும், எல்லா நெசவுத் தொழிலாளர்களும் விரும்புவதாகவும் கூறுகிறார்கள்.

தற்போது நூல் விநியோகம் கட்டுப்பாடு செய்யப்பட்டுள்ளதால், நூல் தேவையானவர்கள் தங்கள் மாகாணம் அல்லது சமஸ்தான டெக்ஸ்டைல் கண்ட்ரோல் அதிகாரிகளுக்கு விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்.

# பாணிக்கிரகணம்



கே. எஸ். எஸ். ராகவன்

ஏழாம் அத்தியாயம்

## சிறை வாசம்

ஆறுமாதம் கடுங்காவல் தண்டனையை அனுபவிப்பதற்காகச் சாரங்கன் காளிபுரம் சிறைச்சாலையின் எல்லையை மிதித்த பொழுது கவலையுடன்தான் சென்றான். அப்பாவும், அம்மாவும் இந்த சமாசாரத்தைக் கேள்விப்பட்டவுடன் என்ன பாடு படுவார்களோ? தேச பக்தியையும் சுதந்திரப் போரையும் பற்றி அம்மாவுக்கு என்ன தெரியும்? "பிள்ளை ஜெயிலுக்குப் போயிருக்கிறான்" என்பதை நினைப்பதற்கும் வெட்கப்படுவாளோ, என்னமோ?

பூமா! சேச்சே, அவளைப் பற்றி எண்ணுவதும் தவறு! ராஜு சொன்னதைக் கேட்ட பிறகு சாரங்கன் தன்னை ராஜுவுக்கும் பூமாவுக்கும் நடுவே நிற்கும் ஒரு அன்னியன் என்றே கருதத் தொடங்கிவிட்டான். ஆனால், மேலே என்ன செய்வது? அக்னி சாட்சியாக மணந்துகொண்ட மனைவியைத் தெருவில் விட்டு விடுவதா? அல்லது சமுதாயம்தான் அவளுக்கு விடுதலை கொடுத்து ராஜுவை மணக்கச் சம்மதிக்குமா? உலக அபிப்பிராயம் எப்படி இருந்த போதிலும் ராஜு அவளை ஏற்றுக் கொள்வானா? பூமா என்ன நினைப்பாளோ? "கல்யாணம்தான் ஆகிவிட்டது, இவரோடுதான் காலம் தள்ள வேண்டும்" என்று எண்ணுவாளா? இருந்தாலும், இன்னொருவரை நாடின அவள் மனம் கணவன்மேல் அன்பைச் செலுத்துமா? தன் வாழ்க்கை முழுவதும் உணர்ச்சி யற்ற ஒரு பாவனையாகப் போய் விடுமோ?

சாரங்கனின் தலை சுழன்றது. ஒரு விதத்தில் இந்த ஆறு மாதச் சிறை வாசம் ஒரு அனுகூலமாகவே தோன்றிற்று. சாரங்கன் தீர ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்து விடலாம். படிப்பு நின்றதால் பாதகம் ஒன்றுமில்லை. ஒருவேளை புதுவாழ்வு நடத்துவதற்கு அது சௌகர்யமாக இருந்தாலும் இருக்கும். ஆறு மாதங்கள் ஆறு நாட்களாகப் பறந்துவிடும். தேசபக்தர்கள் திருச்சி சிறையில் எவ்வளவு உற்சாகமாக வாழ்க்கை நடத்தினார்கள் என்பதைப் பற்றி ஒரு பிரபல ஆசிரியர் எழுதி யிருந்தது ஞாபகம் வந்தது. புஸ்தகங்கள் கொண்டு வர

வில்லையே என்று ஒரு நிமிஷம் அவனுக்குக் கவலையாயிருந்தது. ஆனால் அங்கிருப்பவர்களிடம் ஏதாவது இல்லாமலா போகும்? ஒருக்கால் நன்றாகப் பாடுகிறவர்கள் கூட அங்கு இருக்கலாம். பாட்டு என்றவுடன் சாரங்கனுக்குச் சாப்பாட்டு நினைவு வந்தது. வஞ்சனையில்லாமல் சாப்பிடக் கூடியவன் அவன். திருச்சி சிறையில் அம்மாப்பேட்டை வெங்கட்ராமய்யர் வார்த்த தோசையைப் பற்றி நாக்கில் ஜலம் சொட்ட அந்த ஆசிரியர் எழுதியிருந்ததை நினைத்தபோது சாரங்கனுக்குத் தோசை இங்கு கிடைத்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்று தோன்றிற்று.

ஜெயிலறையில் நுழையும்போது சாரங்கன் மனதில் சாந்தி நிலவியது, உள்ளத்தில் ஒரு "குஷி" கூட இருந்தது. முகத்தில் புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டான். மற்ற தேசபக்தர்கள் முன் தான் கோழை மாதிரி நடந்து கொள்ளலாமா?

அவனைக் கொண்டு விட்ட அறையில் பன்னிரண்டு பேர்கள் இருந்தார்கள். சரிதான், கூடிப் பேசிக் காலத்தைக் கழிப்பதற்குத்தான் எல்லோரும் வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது. ஆனால், இதென்ன அறையில் நிசப்தம் நிலவுகிறதே? சேச்சே! இதென்ன துர்காற்றம்? சாரங்கன் மனதைத் திடப்படுத்திக் கொண்டான். தேச நிலைமையைப் பற்றிய கவலையினால் அவர்கள் பேசாமலிருக்கிறார்கள்; இதென்ன நாடக சாலையா கேலியும் கூத்துமாயிருக்க?

"ஸார்! உங்களிடம் ஸிகரெட் இருக்கா ஸார்?"—சாரங்கன் இந்தக் கேள்வியை எதிர்பார்க்கவே இல்லை; சிறை சென்ற தியாகிகள் இப்படி முன்பின் தெரியாத ஒருவரோடு அற்பக் காரியத்திற்காக வாய் விட்டுப் பிச்சை கேட்க வேண்டுமா?

பையிலிருந்த ஸிகரெட் பாக்கட்டை வெளியே எடுத்ததுதான் தாமதம், அறையிலிருந்த பன்னிரண்டு பேரும் அவன் மேல் விழுந்து அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டார்கள். கையில் ஒன்றும் கிடைக்காதவர்கள் ஸிகரெட் எடுத்துக் கொண்டு போனவர்களை வைததைக் காதால் கேட்க முடியவில்லை. சாரங்கன் திருக்குறள் பிரசங்கம், ராமாயண காலக்ஷேபம் இவைகளைப்பற்றிக் கட்டியிருந்த ஆகாசக் கோட்டைகளை மூட்டை கட்டி வீசியெறிந்தான்.

"ஸார், 'கோல்ட் பிளேக்' ஸிகரெட் இப்போது கிடைக்கிறதா? என்ன இருந்தாலும் 'கோல்ட் பிளேக்' 'கோல்ட் பிளேக்' தான் ஸார்" என்றார் ஒருவர் சாரங்கன் கொடுத்த ஸிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டே.

"ஸார், இவர் அயல் நாட்டுச் சாமான்களை அப்படியே நெருப்பில் போட வேண்டும்



என்ற இயக்கத்தைத் தட்டி எழுப்பப் போகிறாராம். அதற்கு வழிகாட்டியாகத்தான் 'கோல்ட் பிளேக்' சிகரெட்டை விடாமல் கொளுத்திக்கொண்டேயிருக்கிறார்" என்றார் சிகரெட்டைக் கைப்பற்றும் சண்டையில் தோற்றுப் போன ஒரு நபர்.

"என்னை மட்டும் சொல்கிறீரே, பண்டிட் நேரு கூடத்தான் 'பாரின்'—Foreign—சிகரெட் குடிக்கிறார்."

"பண்டிட் நேருவாயிருந்தாலென்ன, அவர் தாத்தாவாயிருந்தாலென்ன, குற்றம் குற்றம் தான்."

"வாரும் ஐயா, நம் காலத்து நக்கீரரே!" என்றார் தமிழ் இலக்கியத்தில் ருசியுள்ள இன்னொரு தேசபக்தர்.

சாரங்கனுக்கு இவை எல்லாவற்றையும் கேட்க முடியவில்லை. நல்ல வேளையாக இந்த நாடகம் நீடித்து நடக்கவில்லை.

வெளித் தாழ்வாரத்தில் "டக் டக்" என்ற பூட்ஸ் சப்தம் கேட்டது. "வார்டர்" என்று பயத்துடன் கூவினார் ஒருவர். பெட்டிப் பாம்பு போல் அடங்கி அவரவர் இடத்தில் பயத்துடன் உட்கார்ந்து கொண்டார்கள் எல்லோரும்.

"தடியடியையும், துப்பாக்கிக் குண்டையும் லக்ஷியம் செய்யாமல் எதிர்த்து நின்ற தேசபக்தர்களா இவர்கள்? இவ்வளவும் இந்திர ஜாலமா? சிறைவாசமா இவர்களை இப்படி மாற்றி விட்டது? ஒருக்கால் நானும் இவர்கள் மாதிரி ஆகிவிடுவேனோ?" சாரங்கன் உடலை இந்த எண்ணம் ஒரு குலுக்குக் குலுக்கிற்று. "எது எப்படிப் போனாலும், உயிருக்கே ஆபத்து வந்தாலும் சுயமரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்று சாரங்கன் சபதம் செய்தான்.

சாரங்கனுக்கு சிகரெட் பழக்கம் பட்டணம் வந்த பிறகு ஏற்பட்டதுதான். அதுவும் எப்போதாவது நினைத்துக்கொண்டால்தான் பிடிப்பான். ஜெயிலில் ஒரே நாளில் அவன் சிகரெட்டெல்லாம் தீர்ந்து போய்விட்டது—பெரும்பாலும் பிறருக்குக் கொடுத்துத்தான். சாரங்கன் மறுநாள் மத்தியானம் வரையில் பொறுத்தான்; முடியவில்லை. நாற்றம் மூக்கைத் துளைத்தது. கீழேகிடந்த பீடி ஒன்றை எடுத்துக் கொண்டு நெருப்புக்குச்சியைக் கிழித்தான்.

"ஓடிவா, வெங்கிட்டு, ஸாருக்கு டிப்ளொமா கொடுசட்டென்று" என்றார் "லீடர்" என்று அழைக்கப்பட்ட ஆத்மநாதன்.

சாரங்கனுக்கு ஒன்றும் புரியவில்லை.

சிரிப்பு ஓய்ந்தவுடன் "லீடர்" அவனுக்கு விஷயத்தை விளக்கினார். "இந்த ஜெயிலுக்கு வந்து சேர்ந்தவுடன் எல்லோரும் 'ஜென்டில்மன்' மாதிரித்தான் நடப்பார்கள்; உட்காரும் போது துணியைத் தட்டி விட்டு உட்காருவார்கள்; அநேகமாக இந்தக் கஞ்சியைக் கண்ணால் கூடத் திரும்பிப் பார்க்க மாட்டார்கள். நாஸூக்காக சிகரெட்டைப் பாதி குடித்து விட்டு எறிந்து விடுவார்கள். இரண்டாம் நாள் கொஞ்சம் தாழும். அதாவது நடையில் ஜோர் இருக்காது; சாப்பாடு கொஞ்சம் உள்ளே போகும். இப்படியாகப் படிப்படியாக நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும். ஆனால் ஒருவன் "கஸிபுர வாஸி" என்னும் பட்டம் பெறுவதற்கு ஒரு முக்யமான பரீட்சையில் தேறவேண்டும்.



அதுதான் இந்தப் பீடி. எவன் ஒருவன் கீழே கிடக்கும் பீடியைப் பொறுக்கிக் கொளுத்துகிறானோ, அவன் தான் இவ்வரிய பட்டத்தைப் பெறுவதற்குத் தகுதியுள்ளவனாகக் கருதப்படுகிறான்" என்று சொல்லிக் கொண்டே அவர் சாரங்கன் தலையில் ஒரு காகிதக் குல்லாயை வைத்தார். அதில், "இவர் நமது சங்கத்தின் புது அங்கத்தினர். சங்கத்தின் சகல உரிமைகளும் இவருக்கு உண்டு; வாழ்க காலிபுரம்! வாழ்க காலிபுர வாசிகள்!" என்று கொட்டை எழுத்தில் எழுதியிருந்தது.

நம் தேசபக்தர்கள் நாஸூக்காகப் பேசும் பழக்கத்தையும் "ராங்கி"யையும் இழந்திருக்கலாம்; ஆனால் அவர்கள் ஹாஸ்ய உணர்ச்சியை மட்டும் விடவில்லை என்று நினைத்துச் சாரங்கன் மனதிற்குள் சிரித்துக் கொண்டான்.

## எட்டாம் அத்தியாயம்
## புதிய நிர்மாணம்

"லீடர்" சொன்ன கதைகளைக் கேட்டபோது சாரங்கனுக்கு இப்படியும் மனிதர்கள் இருப்பார்களா என்றுதான் தோன்றிற்று. வார்டர்கள் என்றால் ஒரு தனி வர்க்கமல்லவே? அவர்களும் நம்மைப் போன்றவர்கள்தானே? நம் உடலில் ஓடும் ரத்தம் அவர்கள் உடம்பிலும் ஓடவில்லையா? கேவலம் பணத்திற்கு அடிமைப்பட்டுத் தங்கள் சகோதரர்களையே—ஒரு புனிதமான கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கும் தேசபக்தர்களையே—மிருகங்களுக்கும் கேவலமாக நடத்துவார்களா? சாரங்கன் முகத்தில் சந்தேகக் குறி தோன்றுவதைக் கண்ட "லீடர்" கொஞ்சம் காரமாகவே பேச ஆரம்பித்தார்.

"நான் சொல்வதை நம்புவது சிரமம் தான். யாராவது என்னிடமே இம்மாதிரி சொன்னால் நான் அதைக் கட்டுக்கதை என்று தூரத் தள்ளி விடுவேன்......ஆனால் இங்கே கண்ணால் கண்ட பிறகு...... கேளுங்கள் ராமப்பிரம்மத்தை, நான் சொல்வது பொய்யென்று தோன்றினால்... பாவம், மனிதர் சாப்பிடும்போது, 'இந்தக் கஞ்சியை நாய்கூடக் குடிக்காது' என்று சொன்னதற்காக வார்டர் அவரை ஒரு மணி நேரம் படை படைக்கிற வெயிலில், தலையில் அவரால் தூக்க முடியாத பாறாங்கல்லை ஏற்றி வைத்து ஓட ஓட விரட்டினான். நம் நாகசுப்ரமண்யத்தின் முதுகைப் பாருங்கள், இன்றைக்கும் இருக்கின்றன அந்த வடுக்கள். அந்த வார்டருக்கு முதுகு கொஞ்சம் கூனல். அவன் நடந்து கொண்டிருந்தபோது நாகசுப்ரமணியம் எதையோ பார்த்துச் சிரித்தாராம். தன்னைத் தான் பரிகாசம் செய்கிறார் என்று சொல்லி, வார்டர் அவர் முதுகில் புளியன் விளாரால் அடித்தான். "இதென்ன அநியாயம்?" என்று குப்புசாமி கேட்டதற்கு வார்டர் என்ன செய்தான் தெரியுமா? குப்புசாமியையும் பிடித்து அவர் கையில் விளாரைக் கொடுத்து நாகசுப்ரமணியத்தை அடிக்கும்படி செய்தான். குப்புசாமி கொஞ்சம் தயங்கினால் போதும், அவர் முதுகில் 'பளார், பளார்' என்று கசையடி......"

சாரங்கன் காதை மூடிக்கொண்டான். இந்த மனுஷனுக்கு இந்தக் கன்றாவி சமாசாரங்களைச் சொல்வதில்தான் என்ன திருப்தி? என்று அருவருப்புத் தோன்றியது அவனுக்கு. ஒருவேளை, இதெல்லாம் வெறும் கற்பனையா? அல்லது ஏதோ கொஞ்சம் நிஜத்தை ஆதாரமாக வைத்துக் கொண்டு கயிறு திரிக்கிறார்களா? சாரங்கனுக்கு அங்கிருந்தவர்கள் பேரில் நம்பிக்கையில்லை; அவர்கள் நடத்தை பெரும்பாலும் அவனுக்கு அருவருப்பையே தந்தது.

ஆனால் அவன் விடுதலைக்குக் கொஞ்ச நாள் முன் நடந்த ஒரு சம்பவம் அவன் மனதையே மாற்றிவிட்டது.

நவம்பர் மாதம் மூன்றாவது வாரமோ நான்காவது வாரமோ ராமப்பிரம்மம் திடீரென்று சொன்னார்: "என்ன பைத்தியக்காரத்தனம் செய்துவிட்டோம்......காந்தி ஜயந்தி நாம் கொண்டாடவில்லையே?"

"இப்போதுதான் என்ன...நாம் நாளை தினம் ஜயந்தி கொண்டாடினால் போச்சு" என்றார் 'லீடர்.'

பரபரப்புடன் ஏற்பாடுகள் ஆரம்பமாயின. பழைய பத்திரிகை ஒன்றில் போட்டிருந்த மகாத்மாவின் படத்தை ராமப்பிரம்மம் பயபக்தியுடன் எடுத்து, பழங்கஞ்சி கொஞ்சம் சமையலறையிலிருந்து இரகசியமாக எடு

துக் கொண்டு வந்து சுவரில் ஒட்டினார். ராகசுப்ரமணியம் கை ககத்தாலேயே சுவரைக் கிறித் தேசியக் கொடியைப் படத்தின்மேல் காட்டினார். இந்தக் கொடி போதாதென்று முருகேசம் தன் வேட்டியைக் கிழித்து, ஒரு பாகத்தில் ஆரஞ்சு நிறத்திற்காகத் தன் கையைக் கீறி ரத்தத்தைத் தடவினார். எங்கிருந்தோ மை பாட்டில் கொண்டு வந்து அதிலிருந்து பச்சை வர்ணம் உண்டாக்கினார் இன்னொருவர்.

மறுநாள் காலையில் ஐந்து மணிக்கே எழுந்து அவரவர்களுக்கு உண்டான சாரீரத்தில் "தாயின் மணிக்கொடி பாரீர்" பாடி த்வஜாரோகணம் செய்தார்கள்.

"மகாத்மா காந்திக்கு ஜே! புரட்சி வாழ்க! க்விட் இந்தியா!" என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன.

அரைத் தூக்கத்திருந்த வார்டர் விழித்துக் கொண்டான்.

மளமளவென்று வந்து, "இதென்ன கொம்மாளம்?" என்று அலட்சியமாகக் கேட்டான்.

"உனக்குத் தெரியுமாப்பா, காந்தி காந்தி என்று ஒத்தர் இருக்காரே......" என்று ஆரம்பித்தார் ராகசுப்ரமணியம்.

வார்டரால் இந்தக் கேலியைப் பொறுக்க முடியவில்லை.

"நல்லாத் தெரியுமே, இந்தப் பொக்கை வாய்க்கிழம்தானே அது" என்று சொல்லிக் கொண்டே ஒரு தாவுத் தாவிப் படத்தைக் கிழித்துவிட்டான்.

ராமப்பிரம்மத்தால் இதைப் பொறுக்க முடியவில்லை. வார்டர்மேல் பாய்ந்து அவனைக் கீழே தள்ளி விட்டார். நிலைகுலைந்த வார்டர் விழுந்தபடியே தன் "விஸிலை" எடுத்துப் பலம் கொண்ட மட்டும் ஊதினான்.

ஐந்து நிமிஷங்களில் அறையைச் சுற்றிலும் ஒரே போலீஸ்காரர்களின் கூட்டம்.

வார்டர் உள்ளே இருந்தான். ஜெயில் கதவு மூடியிருந்தது.

"இவர்கள் வார்டரைச் சிறைவிட்டு விட்டு வெளியே போகப் பார்க்கிறார்கள். விடாதீர்கள்!" என்று கத்தினார் வெள்ளைக்கார ஸார்ஜண்ட்.

ஆனால், வெளியே ஒருவரும் ஓடவில்லை, ஓடப் பிரயத்தனமும் செய்யவில்லை.

தன் ஜோஸ்யம் தப்பாய்ப் போய்விட்டதே என்று வெள்ளைக்கார ஸார்ஜண்டிற்குக் கோபம் வந்தது. "என் ஜடம் மாதிரி நிற்கிறீர்கள்! லாதி சார்ஜ்!" என்று கட்டளை பிட்டார் கான்ஸ்டெபிள்களைப் பார்த்து.

அரை மணி நேரம் "தடியாராதனை" நடந்தது. அந்தச் சிறைச்சாலை நூறு அடி நீளம், நாற்பது அடி அகலம்தான். ஒருவனாலும் தப்ப முடியவில்லை. கான்ஸ்டேபிள்களுக்கே அலுத்த பிறகுதான் தடியடிப் பிரயோகம் நின்றது.

"இந்தக் கலாட்டாவிற்கெல்லாம் காரணம் யார்?" என்று ஸார்ஜண்ட் அதிகார தோரணையிலேயே கேட்டார் வார்டரைப் பார்த்து.

வார்டர் ராமப்பிரமத்தைச் சுட்டிக் காண்பித்தார். அவரைப் பார்க்கத் திரும்பின ஸார்ஜண்டின் கண்ணில் தேசியக் கொடியும் பட்டது.

"ஏய், எழுந்திருந்து இந்தக் கிழிசல் துணியைத் தூக்கி எறி!" என்று ஸார்ஜண்ட் உத்தரவு போட்டார்.

அவர் விரும்பினால்கூட எழுந்திருக்க முடியாத நிலையிலிருந்தார் ராமப்பிரம்மம். பாவம், முதலில் நல்ல அடி. தவிர மூக்குக் கண்ணாடியில் வேறு அடிபட்டுக் கண்ணாடி கண்ணில் பதிந்து விட்டது. கண்ணைத் திறக்கவே முடியவில்லை அவரால்.

ஸார்ஜண்ட் துரையால் இந்தச் சின்ன சமாசாரங்களைக் கவனிக்க முடியுமா? தன் கட்டளையை அலட்சியம் செய்கிறாரென்று ஆங்காரம் கொண்டு எழுந்து போய் ராமப்பிரம்மத்தின் வயிற்றில் ஒரு உதை—பூட்ஸ் காலால்—கொடுத்தார்.

சாரங்கனால் பொறுக்க முடியவில்லை.

"......அவர் அடிபட்டிருப்பது உனக்குத் தெரியவில்லையா?" என்று அலறிக் கொண்டு, காலை மறுபடியும் ஓங்கிக்கொண்டிருந்த ஸார்ஜண்டைப் பிடித்துத் தள்ளினான்.

அவ்வளவுதான்! மறுபடியும் தடியடிப் பிரயோகம் ஆரம்பித்தது.

ஒரு மணிக்குப் பிறகு அந்த அறையிலிருந்து கிளம்பிய ஹீன ஸ்வரங்கள், யுத்தத்திற்குப் பின் யுத்த களத்தில் கேட்கும் நிலைக்குரலை ஒத்திருந்தது.

சாரங்கன் மறுபடியும் ஒரு சபதம் செய்தான்: "எது எப்படிப் போனாலும் சரி, இந்த இங்கிலீஷ்காரர்கள் மேல் இதற்குப் பழிக்குப்பழி வாங்காமல் இருக்கமாட்டேன். என் உயிர் இனி எனக்குத் திரணமாத்திரம்." (தொடரும்)

---




# வழங்குகிற பெருமதிகள் . . .

பாங்க்நோட்டின் உத்தேசம் திட்டமான பெருமதியாகும். ஆனால் உலக அமளி துமளிகளின் ஒரு விளைவு என்னவெனில், சில செலாவணி நாணயங்கள் பெரிதளவு மதிப்பிழக்கின்றன. எனினும் இந்த பிவுனை மூல்யபரிவர்த்தன காலத்தில் ஒரு பிரமாணை மட்டுமாவது குலையாமல் நிலைத்திருக்கிறது. ஒரு கட்டு துணிமீது காணும் 'ஆடு மார்க்கு' அன்றும் இன்றும் ஒருபோலவே, நாடு பூராவுமுள்ள எமது ஏரான வாடிக்கைக்காரர்களுக்குக் கிடைக்கும் உண்மை பெருமதிக்கும், நியாயமான விலையில் சிறந்த குணத்திற்கும் உத்தரவாதமாக விளங்குகிறது.

பெயர்போன ஆடு மார்க்கு முத்திரையுடைய நெசவுத் தரங்களில் பணம் விநியோகிப்பது நன்மையான காரியமேயாகும்.

**கம்பளி:** பூராவும் கம்பளி ஸூப்பர் ப்லாங்கெட்டுகளும் பிரயாணை ரக்குகளும்—ட்வீடுகளும், தேசிய கம்பளி நிறுககளும். பூனையன் ஷர்ட்டிங்குகளும்.

**பருத்தி:** ஸெல்லா ஷர்ட்டிங்குகளும், தேசிய லாங்கிலாத்தும்—கோல்ட் ஸ்டாண்டர்ட் ஷர்ட்டிங்குகள்—வெளு லாங்கிலாத்தும், சாயம் தோய்த்ததும்—ஸேம்ரா ஸூட்டிங்குகள்—டஸ்ஸோர்கள்—ட்ரில்கள்—ட்வில்கள் வகையறு.

**பட்டு:** 44"/45" அகலம், பற்பல சாயல்களில்.

**தயாரிப்போர்கள்: தி பங்களூர் வூளன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கோ., லிட்.**

ஏஜண்டுகள், காரியதரிசிகள், ட்ரெஷரர்கள்

**பின்னி & கோ.**

(சென்னை) லிட்.



"ஆடுமார்க்கு"
அணிவதற்குகந்த துணிகளின் அறிகுறி

By 705

# என் செய்வேன்?

**எஸ்.வி.எஸ்.**

அன்று என் கண்களில் இரு கண்ணீர்த் துளிகள் அரும்பின. அதை அவர் பார்த்து விட்டார். (அப்போது எனக்குக் கலியாணமாகவில்லை.)

ஆம்; அன்று நான் ஆற்றங்கரைக்குப் போய்க்கொண்டிருந்தேன். ஒரு சுமை அழுக்குத் துணிகளும் என்னைவிட ஒரு சாண் உயரமுள்ள குடமும் இடுப்பில் எடுத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தேன். அப்போது என்னை அறியாமலே என் கண்களில் நீர் மல்கி விட்டது. வழியில் எதிர்பாராதவிதமாக அவர் என் எதிரே வரவே, என்னைப் பார்த்த தோடன்றி என் கண்களில் அரும்பிய கண்ணீரையும் பார்த்து விட்டார்.

இன்னொரு நாள் நான் கொல்லையில் பற்றுப் பாத்திரங்கள் போட்டுத் தேய்த்துக் கொண்டிருந்தேன். பாத்திரங்கள் ஏராளமாக இருந்ததால் வெகு நேரம் தேய்க்க வேண்டியதாயிற்று. அந்தப் பாத்திரங்களில் எல்லாம் என் உயிரை வாங்கிய பாத்திரம் ஒரு இருப்பு வாணலி. முதல் நாள் பண்டிகையானதால் அடுப்பில் போட்டு வடை பொரித்து எடுத்ததால், நன்றாகக் கரி ஏறி யிருந்தது. செங்கல் பொடி பண்ணித் தேய்த்துப் பார்த்தேன். மண்ணில் வைத்துத் தேய்த்துப் பார்த்தேன். எதற்கும் அந்தக் கரி விடவில்லை. அப்போது அம்மாமி "எத்தனை நாழிடீ இந்தப் பாத்திரங்களைத் தேய்க்க? ஒரு காரியம் சொன்னால் அதோடேயே, மடிஞ்சு சமாதியாகி விடுகிறாயே!" என்றாள்.

என் உள்ளத்தில் அடங்கிக் கிடந்த துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. பதில் சொல்ல முடியவில்லை. கண்களில் பொல பொலவென்று கண்ணீர் வந்து விட்டது. அப்போது செம்பில் ஜலம் எடுக்கக் கொல்லைப் பக்கம் வந்த அவர் இதைப் பார்த்துவிட்டார். அவர் முகம்— அந்தக் களையானமுகம்—ஏதோ மாதிரியாகிவிட்டது!

மற்றொரு நாள்......

அன்று தீபாவளி. காலேஜில் படித்துக் கொண்டிருந்த அவர் தீபாவளிக்கு முதல் நாளே வீட்டுக்கு வந்திருந்தார். அன்றிரவெல்லாம் எனக்கு ஓய்வு ஒழிவில்லாத வேலை! இந்த நிலைமையில், நன்றாகத் தூங்கிவிட்டு ஆறு மணிக்கு எழுந்திருந்த அம்மாமி, "இன்னும் எங்களுக் கெல்லாம் வெந்நீர் போட்டாக வில்லையா? இப்படி ஒவ்வொரு காரியமும் நீட்டினால் என்னிக்கு விடியறது?" என்று குத்தலாகச் சொன்னாள். மனசு தாங்க முடியாமல் வெடித்து விடும்போ லிருந்தது. கண்களில் குபுகுப என்று கண்ணீர் பெருகிவிட்டது.

"என் அம்மா, நாளும் கிழமையுமா அவளை அப்படிப் படுத்துகிறாய்?" என்று ஒரு குரல் வந்தது. முகத்தை ஏறெடுத்துப் பார்த்தேன். கண்ணீர்த் திரையை ஊடுருவி அவர் முகம் என் இதயத்தில் படிந்தது.

இதைப் போன்ற எத்தனையோ சம்பவங்களின்போது அவர் என்மீது இரக்கங் கொண்டார். அந்த இரக்கம் நாளடைவில் அன்பாக மாறியது. அந்த அன்பில் அவருடைய தந்தைக்கும், தாய்க்கும் பிடிக்காத காரியத்தைச் செய்தார்.

என்னைப் பலரறிய அக்னி சாட்சியாகத் தம் தர்மபத்னி என்று ஏற்றுக் கொண்டார். அவருடைய இன்ப துன்பங்களில் உண்மையிலேயே பங்களித்து அனாதையாகக் கிடந்தவளை உயர்த்தியதை விட எனக்குக் கிடைக்கக் கூடிய பாக்கியம்தான் என்ன இருக்கிறது!

இதற்கெல்லாம் என் வாழ் நாளில் அவருக்கு என்ன கைம்மாறு நான் செய்ய முடியும்? நினைக்க நினைக்க நன்றியினால் பூரித்து..... ஆம், கண்களில் நீர் துளிகள் ஒன்றன்பின் ஒன்றாக வருகிறது.

• • •

அச்சமயத்தில் அவரே வந்துவிட்டார்.

"அம்புஜம்! மறுபடியுமா கண்ணீர்?"

"நான் என்ன செய்வேன்? எல்லையில்லாத் துன்பத்தில் உழன்ற போதும் என் கண்கள் கண்ணீர் பெருக்கித் தங்களை மிகவும் வருத்தமுறச் செய்தது. அந்தத் துன்பத்தை யெல்லாம் தாங்கள் துடைத்ததை நினைத்தால் எல்லையில்லா இன்பம் உண்டாகிக் கண்கள் கண்ணீர் சொரிகிறதே! அதற்கு நான் என்ன செய்வேன்?"

# கர்வமும் பாங்கமும்

**அருந்தமா**

போட்டிக் கதை—10

டாக்டர் மூர்த்தி இத்துடன் மூன்று தடவை ஹாரனை அடித்து விட்டான். கதவைத் திறப்பவர் எவரையும் காணோம். பீக், பீக் என்று அலறிற்று மின்சார ஹாரன். ஆனால் ஒரு பதிலும் இல்லை. பிறகு கை ஹாரனால் பாம், பாம் என்று ஓசையைக் கிளப்பினான். அதற்கும் பதில் இல்லை. மூர்த்திக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. நல்ல வெய்யில் வேளை. பங்குனி மாதத்துச் சூரியன் தலை வெடித்துவிடும் போல் காய்ந்து கொண்டு இருந்தது. மூர்த்தி காரிலிருந்தபடியே வீட்டை நோக்கினான். ஒரு பெண் சாய்வு நாற்காலியில் படித்துக் கொண்டு இருந்தாள். ஒவ்வொரு தரம் ஹாரன் சப்தத்திற்கும் அவள் "காயர், காயர்" என்று உரக்கக் கூப்பிடலானாள்.

"இருந்த இடத்திலிருந்தே காயர், காயர் என்றால்!" என்று டாக்டர் மூர்த்தி பல்லை நற, நற வென்று கடித்துக் கொண்டான். "செல்வச் செருக்கு" என்று அவன் வாய் முணு முணுத்தது. "ஓர் அடி தூரத்தில் இருக்கும் கேட்டைத் திறக்க காயர் வர வேண்டுமாம். பணம் செய்யும் வேலை!"

அவன் திரும்பிப் போயிருப்பான். ஆனால் அவன் 'மூர்த்தி' அல்லவா?

அவனுக்கு அவன் தாய் இட்ட பெயர் 'சத்திய மூர்த்தி!' அவன்



தோழர்கள் மாத்திரம் அவனை 'சாமர்த்திய மூர்த்தி' என்றே அழைத்தார்கள். சாமர்த்தியம் இல்லாவிட்டால் இந்த இளம் முப்பது வயதிலேயே இவ்வளவு பிரக்யாதி அடைய முடியுமா? அந்தச் சாமர்த்திய மூர்த்தி இந்தப் பெண்ணின் கர்வத்திற்காகப் பெரிய இடத்துக் கேஸை விட்டு விட விரும்பவில்லை. தானே இறங்கிக் கேட்டைத் திறந்துவிட்டு வந்து காரை உள்ளே செலுத்திச் சென்றான். பெரிய பங்களா. தோட்டம் வெகு அழகாயும், அலங்காரமாயும் இருந்தது. இந்த ஐசுவர்யச் சின்னங்களெல்லாம் அவனது கோபத்தை அதிகரிக்கச் செய்தன.

அவன் உள்ளே நுழையும்போதே அந்தப் பெண் எழுந்து நின்று சிரித்து வரவேற்றாள். "நீங்களேயா திறந்து கொண்டீர்கள் ......இந்த நாயர் எங்கே போனானோ தெரியவில்லை. ஸோ ஸாரி!" என்றாள்.

"ஆமாம், இனிப்பு வேறே!" என்று நினைத்துக் கொண்டான் மூர்த்தி. அவன் பதிலுக்குக் கூடச் சிரிக்கவில்லை. முகத்தைச் சற்றுக் கடுமையாகவே வைத்துக் கொண்டான்.

தன் பெண்ணின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே அந்த வீட்டு எஜமானரே வந்து விட்டார். அவர் வேறே, "இந்த வேலைக்காரர்களே இப்படித்தான் ஸார், ஹி...ஹி...ஹி!" என்று வரவேற்றார். மூர்த்தியின் முகத்தில் ஓர் ஏளனச் சிரிப்புத் தோன்றி மறைந்தது.

"நோயாளி எங்கே?"

"வாருங்கள் இப்படி!" என்று அவனை மாடிக்கு அழைத்துச் சென்றார் அவர்.

நிர்மலா கீழேயே தங்கி விட்டாள். அவள் வைத்தியக் கல்லூரியில் கடைசி வருஷம் படித்துக் கொண்டிருந்தாள். ஆதலால் இந்த பிரபல டாக்டரிடம் அவளுக்கு மதிப்பு ஏற்பட்டதில் வியப்பு இல்லை. ஆனால் அவனுடைய முகபாவம் அவளை அருகில் நெருங்க விடவில்லை. அவன் தன்னை அலக்ஷியம் செய்ததாக நினைத்துக் கொண்டாள்.

டாக்டர் நோயாளியைப் பார்த்து விட்டுக் கீழே இறங்கினார். நிர்மலா எழுந்து, "அம்மாவுக்கு என்ன ஜுரம், என்ன ஆகாரம் கொடுக்க?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"எல்லாம் மேலே சொல்லி இருக்கிறேன்" என்று சுருக்கமாயும் சாவதானமாயும் சொல்லிவிட்டுப் போய்விட்டார் டாக்டர்.

நிர்மலா உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

மூர்த்தி வாசலில் சென்று காரில் ஏறிக் கொண்டு புறப்பட்டான். கேட்டுக்கு வெளியே சென்றதும் காரை நிறுத்தி, கீழே இறங்கி கேட்டை மூடி விட்டு மறுபடியும் காரில் ஏறிச் சென்றான். "வேண்டாம்!" என்று ஏதோ சொன்னாள் நிர்மலா. அது அவன் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. அவன் திரும்பிப் பாராமலே போய்விட்டான்.

அவன் போன பிறகு நிர்மலா மேலே ஓடினாள். அம்மாவின் அருகில் உட்கார்ந்து கொண்டாள்.

"எப்படி இருக்கிறது, அம்மா?"

"தலைவலி கொஞ்சம் சுமார். டாக்டர் கெட்டிக்காரன் என்று எல்லோரும் சொல்லுகிறார்கள். அவனைப் பார்த்தாலும் அப்படித்தான் தோன்றுகிறது!"

நிர்மலா அதைக் கவனிக்கவில்லை. அதை அவள் ஆமோதிக்கவில்லை போலும். எழுந்து அவன் எழுதிக் கொடுத்த மருந்து என்னவென்று பார்வையிட்டாள். தாயாருக்குத் தர்மாமீட்டரை வைத்து டெம்பரேசரைக் குறித்து வைத்து விட்டு வெளியே போகலானாள். அப்போது அவளுடைய தகப்பனார் சுப்பிரமணியம் அங்கே வந்தார்.

"என்ன, நிர்மல்! டாக்டரைப் பார்த்தாயா? உன்னிடம் என்ன சொன்னார்?"

"எல்லாம் உங்களிடம் சொல்லி யிருப்பதாய்ச் சொன்னார்."

அவள் குரலிலிருந்து டாக்டர் அவளிடம் நல்ல அபிப்பிராயத்தைப் பெறவில்லை என்று அவருக்குத் தெரிந்தது.

"என்ன, உன்னிடமா அப்படிச் சொன்னார்? நீ வைத்தியக் கல்லூரி மாணவி என்று சொன்னாயோ?"

"அவ்வளவு தூரம் அவர் பேச்சை வைத்துக்கொள்ள வில்லை."

"உனக்குக் குறையாக இருக்கிறதா என்ன?" என்றபோதே களுக்கென்று ஒரு சிறிய துண்டுச் சிரிப்பு அவர் தொண்டையில் சப்தித்தது.

"எனக்கு ஒன்றும் குறை இல்லை!" என்று சீறினாள் நிர்மலா. "நான் ஒன்றும் அந்தக் கர்வம் பிடித்தவனுடைய பேச்சுக்காக ஏங்கவில்லை. கொஞ்சங் கூட மரியாதையே

இல்லையப்பா அவனுக்கு!'' என்று ஏக வசனத்தில் ஆரம்பித்து விட்டாள்.

"அவன் கிடக்கிறான். தன்னுடைய பிரபல்யத்தினால் அகம்பாவம் ஏற்பட்டிருக்கும் அவனுக்கு!'' என்று சாந்தப்படுத்தினார் தகப்பனார்.

மூர்த்தி தன் வீட்டிற்குச் சென்றான். அவன் வயதான தாய் கதவைத் திறந்தாள். "ஏண்டாப்பா இத்தனை நாழிகை, சாப்பிட வா!'' என்று வரவேற்றாள். அவனது மூன்று வயதுப் பெண் ஜயா ஓடி வந்து 'அப்பா' என்று காலைக் கட்டிக் கொண்டாள். "அப்பா பாவம், உவ்வாவா அப்பா?'' என்றாள் அவன் களைத்த முகத்தைப் பார்த்து.

"இல்லேடி கண்ணு, அப்பா குளிச்சா உவ்வா போயிடும்'' என்று சிரித்துக் கொண்டே அவளை வாரி அணைத்தான் மூர்த்தி.

"அம்மா...'' என்றான் மூர்த்தி சாப்பிட்டுக்கொண்டே. "நமக்கு நிறையப் பணம் வந்தால் நம் ஜயாவை எப்படி பார்த்துக் கொள்ளுகிறது என்று பயமாக இருக்கிறது.''

அவன் தாயார் காமாக்ஷி அம்மாள் சிரித்துக் கொண்டாள். தன் மகன் இவ்வளவு பணம் சம்பாதித்தும், 'வந்தால்' என்று எதிர்காலத்தை உபயோகிப்பதைக் கேட்டு, "ஏண்டா, அப்படி?'' என்றாள்.

"அம்மா, பணம் என்ன பாடு படுத்துகிறது தெரியுமா?'' என்று பீடிகை போட்டுக் கொண்டு அன்று நடந்ததைச் சொன்னான். அவன் தாயார், "ஆமாம், ஆமாம்'' என்று ஆமோதித்து விட்டு, "நம்ம குழந்தைக்கு என்ன பயம்? அவள் அம்மா எப்படிப்பட்டவள்! அவளைக் 'கொண்டு' வந்தாலே போதுமே. இல்லை, அப்பாவுக்குத் தான் என்ன?'' என்றாள்.

"அப்படியானால், உன் பிள்ளைக்குக் கர்வம் கிடையாது என்கிறாயாக்கும்!''

காமாக்ஷி அம்மாள் மௌனமாகப் புன்னகை பூத்தாள்.

அடுத்த நாள் நிர்மலா டாக்டர் எதிரிலேயே வரவில்லை. அவன் கார் ஓசை கேட்டவுடனே வேறு வழியாக வெளியே கிளம்பிவிட்டாள்.

மூர்த்தி நோயாளியைப் பரீக்ஷை செய்தான். "இன்று எப்படி இருக்கிறது, அம்மா?'' என்றான். குரலில்தான் என்ன வினயம் என்று தோன்றியது பார்வதி அம்மாளுக்கு.

கை அலம்ப ஜலம் கொடுக்கவோ, தர்மாமீடர், காகிதம் எடுத்துக் கொடுக்கவோ ஆளில்லாமல் தவித்தான் மூர்த்தி. நிர்மலாவின் தாய், "ஐயோ, இந்தப் பெண்கூட எங்கேயோ போய்விட்டதே!'' என்று அங்கலாய்த்தாள். அப்போது அங்கே வந்த கணவரிடம், "கொஞ்சம் டாக்டருக்கு வேண்டியதைப் பாருங்களேன்'' என்றாள். அவர் உடனே, "நாயர், நாயர்'' என்று அழைக்கப் போய்விட்டார்.

மூர்த்தி, "நீங்கள் அலட்டிக் கொள்ளாதீர்கள், அம்மா! நான் பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்றான் புன்சிரிப்புடன்.

அவன் மேஜையின் அருகில் சென்றான். அங்கே எல்லாம் அலங்கோலமாகக் கிடந்தன. "நாம் செய்ய வேண்டியதை எல்லாம் நாயரைச் செய்யச் சொன்னால் இப்படித்தான் இருக்கும்'' என்று நினைத்துக் கொண்டே, எல்லா சாமான்களையும் ஒழுங்காக எடுத்து வைத்தான். ஓரத்தில் இருந்த ஒரு காகிதம் காற்றில் பறந்து கீழே விழுந்தது. அதை எடுத்துப் பார்த்தான் மூர்த்தி. மணிக் கணக்காக டெம்பரேசர் குறிக்கப்பட்டிருந்தது. லேசாகச் சிரித்துக் கொண்டான். பிறகு நோயாளிக்கு வேண்டியவைகளைக் கவனித்து விட்டுக் கிளம்பினான்.

வீட்டு எஜமானர் வந்து விசாரித்தார். மூர்த்தியின் முகம் கவலையைக் காட்டியது. டைபாய்டு என்று சந்தேகிப்பதாயும், அடுத்த நாள் ரத்தப் பரீக்ஷை செய்வதாயும் சொல்லி விட்டுப் போனான்.

அவன் கேட்டண்டை செல்வதற்கும் நிர்மலா திரும்பி வருவதற்கும் சரியாக இருந்தது. அவள் மரியாதைக்காக 'நமஸ்தே' என்று கை கூப்பினாள். மூர்த்தி அதை ஒரு கையால் ஏற்றுக் கொண்டான். மறுகணம் மறைந்தாள்.

"மரியாதையைப் பார்!'' என்று முணுமுணுத்தாள் நிர்மலா.

உள்ளே சென்றதும் தகப்பனார் டாக்டர் கூறியதை அவளிடம் சொன்னார். அவள் கவலையுடன் உடனே அம்மாவிடம் ஓடினாள்.

"நிர்மலா, நீ கொஞ்சம் இருந்து டாக்டர் வரும்போது பார்த்துக் கொள்ளக் கூடாதா?'' என்றாள் பார்வதி அம்மாள். பிறகு ஜுரத்தில் ஏதோ முனகினாள்.

மறுநாள் மூர்த்தி ரத்தப் பரிசோதனை செய்தான். டைபாய்டுதான் என்று நிர்ணயித்து அவர்களுக்கு அறிவித்தான். நிர்மலாவின் தகப்பனார் பயந்தே போய் விட்டார்.

“தினமும் இரண்டு மணிக்கு ஒருதரம் டெம்பரேச்சர் எடுக்க வேண்டும். இந்த அறையை சற்றுச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்” என்று கூறினான் மூர்த்தி. அவன் கண்கள் மேஜையின் மேல் சென்றன. அதன் குறிப்பை அறிந்து கொண்டார் சுப்பிரமணியம். பிறகு ஆகார விவரங்களைச் சொல்லி விட்டு வீட்டிற்குப் புறப்பட்டான் மூர்த்தி.

“வேண்டுமானால் இரண்டு நர்ஸுகள் ஏற்பாடு செய்கிறீர்களா?” என்று கேட்டார் சுப்பிரமணியம்.

“உம்...... வீட்டில் பார்த்துக் கொள்ள யாராவது இருந்தால் அவசியமில்லை.”

“என் பெண் மெடிகல் காலேஜில் எம். பி. பி. எஸ். கடைசி வருஷம்.”

“அப்படியானால் நர்ஸ் அனாவசியம்!”

“இல்லை, அதற்கில்லை. குழந்தை......” என்று இழுத்தார் சுப்பிரமணியம்.

மூர்த்தி, வைத்தியத் தொழிலில் இறங்கப்போகும் ‘குழந்தை’யை நினைத்துச் சிரித்துக் கொண்டான் மனதுக்குள்ளேயே.

“சரி, நாளைக்கு ஒரு நர்ஸை அனுப்புகிறேன்” என்று சொல்லி விட்டுப் போனான்.

தந்தையும் மகளும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

“மிஸ்டர் அகம்பாவமூர்த்தி என்ன சொல்லுகிறார் தெரியுமா உன்னைப் பற்றி?” என்று சிரித்துக் கொண்டே கேட்டார் சுப்பிரமணியம்.

“நான் அவர் அபிப்பிராயத்தை அணுவளவும் மதிக்கவில்லை, அப்பா! ஆனாலும், சொல்லுங்கள், பார்ப்போம்.”

“நீ நன்றாய் டெம்பரேச்சர் எடுக்கவில்லையாம். அறையைச் சுத்தமாய் வைக்கவில்லையாம்.”

ஒன்றும் பதில் சொல்லாமல் உதட்டைக் கடித்துக் கொண்டாள் நிர்மலா. டாக்டர் கூறியதின் உண்மை மனதை உறுத்தத்தான் செய்தது.

அன்றைய தினத்திலிருந்து நோயாளியின் அறையைத் தானே நன்றாக ஒழுங்காக வைக்க ஆரம்பித்தாள் நிர்மலா. மூர்த்தியிடம் மதிப்பு வந்துவிடவில்லை அவளுக்கு. அவனது நல்ல அபிப்பிராயத்தையும் கோரவில்லை அவளது மனம். அவனது கண்டிப்பான—கர்வமான—வார்த்தைகளுக்கு பயந்தே அவள் அவ்வாறு செய்யலானாள். ஆனால் அதைத் தன் மனதுக்குள்ளே கூட ஒத்துக் கொள்வாளா அவள்!

ஒரு மாதமாகிவிட்டது. பார்வதி அம்மாவின் உடம்பும் குணமடைந்து விட்டது. ஜுரத்தினால் ஏற்பட்ட பலஹீனம் தவிர வேறு ஒன்றுமில்லை.

அன்று நிர்மலா தன் தாய் தகப்பனுடன் வெளி வராந்தாவில் பேசிக்கொண்டிருந்தாள். அம்மா கூறினாள்:

“அந்த மூர்த்தி இல்லாவிட்டால் எனக்கு குணமே ஆகி இராது...அவன் பெயர் என்ன மூர்த்தியோ?”



“சத்தியமூர்த்தி போல இருக்கிறது” என்று பட்டதும் படாததுமாகப் பேசினாள் நிர்மலா.

“நல்ல பொருத்தமான பெயர். நான் மட்டும் அவனுக்கு ‘சௌஜன்யமூர்த்தி’ என்று பெயர் வைத்திருக்கிறேன்.”

நிர்மலாவுக்கு பேச்சு ரஸிக்கவில்லை. அம்மாவின் புகழ் மாலை அவள் காதுகளில் நாராசமாக விழுந்தது. அவள் பலஹீனத்தில் அவனை எதிர்த்துப் பேசக் கூடாது என்று மௌனமாக இருந்து விட்டாளே தவிர முகம் மாத்திரம் சுண்டி விட்டது. அவள் மனதில் அன்று ஏற்பட்ட புண் இன்னும் ஆறவில்லை. அந்த நாள் அவளுக்கு அப்படியே ஞாபகம் வந்தது. நினைத்து நினைத்துப் பொங்கினாள்.

தாயார் காயலாவாக இருந்த சமயத்தில் டாக்டர் வந்தால் சாதாரணமாக அவர் எதிரில் அவள் போவதில்லை. அன்று என்னவோ அவர் வரும்போது அவள் தன் தாயின் பக்கத்தில் நாற்காலியின் மேல் உட்கார்ந்துகொண் டிருந்தாள். அதைப் பார்த்துக் கொண்டே வந்த மூர்த்தி முகத்தை வழக்கத்தை விடக் கடுமையாக வைத்துக் கொண்டு, “இந்த மாதிரி ஜுரத்தில் பக்கத்தில் உட்காருவது அவ்வளவு நல்லதல்ல” என்றான்.

“நான்......” என்று ஏதோ சொல்ல வாயெடுத்தாள் நிர்மலா.

“அதுதான். டாக்டராகப் போகிறவர்களுக்கு இவ்வளவாவது தெரிந்திருக்க வேண்டும்” என்றான். அத்துடன் நிற்காமல், “உடனே போய் உடையை மாற்றிக் கொள்” என்றான். குரலில் அதிகாரம் தொனித்தது.

நர்ஸும் லேசாகச் சிரித்தாள்.



நிர்மலாவுக்கு கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. “என்ன தைரியம்! ‘மாற்றிக் கொள்’ என்று அதிகாரத்தைப் பார். எனக்கும் அதிருஷ்டம் இருந்தால் நாளைக்கே ஒரு பெரிய டாக்டர் ஆக மாட்டேனா? கர்வத்திற்கும் ஓர் எல்லை இல்லையே” என்று வெதும்பினாள். படபடவென்று நான்கு வார்த்தைகள் சொல்லி விட வேண்டுமென்று நாக்கு துடித்தது. ஆனால் தன்னிடம் குற்ற மிருப்பதாகத் தோன்றியதால் ஒன்றும் பேசாமல் வெளியே போய்விட்டாள். நர்ஸின் சிரிப்பு எரிகிற தீயில் எண்ணெயை ஊற்றிற்று.

தன் மகளின் முக மாறுதலைக் கவனித்த பார்வதி அம்மாள் பேச்சை மாற்றினாள்.

“ஆமாம், உன்னுடைய பரீக்ஷை எப்போ?”

“வந்து விட்டது. சீக்கிரத்திலேயே.”

“பிறகு என்ன செய்யப் போகிறாய்?”

“என்ன செய்வது? ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஹவுஸ் ஸர்ஜனாகத்தான் போக வேண்டும்.”

• • •

ஒரு மாதமாகியும் பணம் வராததைக் கண்ட மூர்த்தி ‘பில்’லை அனுப்பினான். அவன் அவ்வளவு

கண்டிப்பா? இல்லை. ஏழைகளிடம் பணமே வாங்க மாட்டான். நடுத்தர மனிதரிடம் தானாகக் கேட்க மாட்டான். அவர்கள் எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்வான். ஆனால் பணக்காரரிடம்—அதுவும் செருக்குடைய பணக்காரர்டம்—சற்றும் தயவின்றி வசூலித்து விடுவான்.

'பில்'லைக் கண்டதும் சுப்பிரமணியத்துக்கு வெகு கோபம் வந்து விட்டது.

“என்ன, கொடுக்காமல் ஓடிப் போய் விடுவோமா?” என்று உறுமினார்.

“அவ்வளவுதான் பழகத் தெரிந்த லக்ஷணம்!” என்று ஏளனமாகச் சிரித்தாள் நிர்மலா.

பார்வதி அம்மாளுக்கு மட்டும் அவர்கள் இதுவரையில் பணம் அனுப்பாதது சற்றும் பிடிக்கவில்லை.

• • •

நிர்மலாவுக்குப் பரீக்ஷை முடிந்து ரிஸல்டும் வந்து விட்டது. ராஜதானியிலேயே முதலாகத் தேறியிருந்தாள்.

நிர்மலா ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஹவுஸ் ஸர்ஜனாக அமர்ந்தாள். அப்பொழுது அவளுக்கு எல்லா இடங்களிலும் போய் வேலை பயில வேண்டி இருந்தது. அங்கே அவளுக்கு மிகவும் உதவி புரிந்து வந்தவள் நர்ஸ் ஞானமணி.

ஞானமணி நாற்பது வயதான மாது. நிர்மலாவின் கள்ளம் கபடற்ற உள்ளமும் புத்திசாலித்தனமும் அவள் மனதைக் கவர்ந்தன. நிர்மலாவுக்குத் தன் அனுபவத்தில் தெரிந்து கொண்ட ரகசியங்களை எல்லாம் சொல்லிக் கொடுத்தாள். இடையிடையே டாக்டர் மூர்த்தியைப் பற்றி ஓயாமல் புகழ்ந்து கொண்டு இருப்பாள் ஞானமணி. அவர் குணத்தை விவரிப்பாள். அவர் படிப்பை உயர்த்தி வைப்பாள். அவர் கைராசியை மெச்சுவாள். அவர் அனுபவத்தைச் சொல்லி வியப்பாள்.

ஆரம்பத்தில் நிர்மலாவுக்கு இதெல்லாம் அருவருப்பாகத்தான் இருந்தது. நல்ல மாதிரியான ஞானமணியின் மனதைப் புண்படுத்தக் கூடாதென்று இந்தப் புகழ்மாலைகளையெல்லாம் அசட்டையுடன் கேட்டுக் கொண்டிருந்தாள். ஆனால் சீக்கிரத்திலேயே அவள் மனது ஆச்சரியம் அடைந்தது. தான் அறிந்த மூர்த்திக்கும் இவள் விவரிக்கும் மூர்த்திக்கும் அஜகஜாந்திரமாகத் தோன்றிற்று அவளுக்கு. ஞானமணி அவர் தன் குருமூர்த்தி என்று கூறுவாள். அவளுக்கு நிர்மலா முன்னுக்கு வரவேண்டுமென்ற ஆசை தோன்றி விட்டது. அவள் ஒருநாள் நிர்மலாவிடம் கூறினாள்:

“நான் ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள், அம்மா. நீங்கள் அந்த டாக்டரிடம் வேலை கற்றுக் கொள்ளுங்கள். அப்புறம் உங்களுக்கு இணை கிடையாது.”

நிர்மலா தான் அபிவிருத்தி அடைய எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருந்தாள். மூர்த்தியிடம் சென்று வேலை கற்றுக் கொள்ளுவது ஒரு தியாகமாகத் தான் தோன்றியது அவளுக்கு.

மறுபடியும் ஞானமணி ஆரம்பித்து விட்டாள். “அவர் புத்திமதிகள்தான் எனக்கு இந்த நிலைமையைக் கொடுத்திருக்கிறது. இப்பொழுது ஞானமணியைக் கோராதவர்கள் கிடையாது......நீங்கள் டாக்டர் லீலாதேவியை நாடினால் காரியம் நடக்கும்” என்று வழியையும் காட்டி விட்டாள்.

“என்ன, லீலா தேவிக்கும் அவருக்கும் அவ்வளவு சிநேகமா?”

“ஆமாம், லீலாதேவி எது சொன்னாலும் அதை அவர் தட்டமாட்டார். லீலாதேவியும் டாக்டர் மனைவி சாந்தாதேவியும் பால்ய சிநேகம். பாவம் சாந்தா தான் இறந்து விட்டாள். தங்கம்னு தங்கக் கட்டி” என்று பெருமூச்செறிந்தாள் ஞானமணி.

நிர்மலா லீலாதேவியைத் தேடிக் கொண்டு போனாள். அவள் மனதில் பலவாறு சிந்தனை அலைகள் மோதின. தீர்க்கமாக யோசித்ததில் தன் பேரில்தான் குற்றம் நிறைய இருப்பதை அறிந்தாள். மூர்த்தியைப் பற்றி ஒவ்வொருவரும் புகழ்வதைக் கண்டு தன் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று உணர்ந்தாள். இப்போது அவனது நன் மதிப்பைக் கோரினாள். தனது தாயின் தீர்க்க தரிசனத்தை நினைத்து வியந்தாள். தாயார் தினமும் “டாக்டர் மூர்த்தியைப் பார்த்தாயா?” என்று கேட்பாள். நிர்மலா, “நான் ஒன்றும் அந்த கர்வ மூட்டையைத் தரிசிக்கவில்லை” என்று சீறுவாள். இப்பொழுது அதை நினைத்துத் தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

(அடுத்த இதழில் முடியும்)

# சாபம் பலித்தது!

லல்லு

'டங்' என்று மேஜையின் மீதிருந்த மணியை ஆத்திரத்துடன் அடித்தேன். பியூன் பீமசேனராவ் ஓடி வந்தான். அவன் அப்படி ஓடி வந்தபோது பூமி அதிர்ந்ததோ என்று நீங்கள் சந்தேகப் படாதீர்கள்; காகிதத் துண்டு காற்றில் அடித்துக் கொண்டு வருவது போலத்தா னிருக்கும் அவன் ஓடி வருவது. நாடக மேடை ராவணனைப் போல மீசை மட்டும் ஆளைத் தூக்கி யடிக்கும். மிகவும் இனிய மனமுடையவன். அவனைக் கண்டதும், "இதோ பார் பீமா, நான் இனிமேல் யாரையும் பார்க்க மாட்டேன் என்று கண்டிப்பாய்ச் சொல்லி அனுப்பி விடு; தெரிந்ததா?" என்றேன்.

அவன் தயங்கி நின்றான். "அம்மா! வயசானவரு; அவரும் அந்த அம்மாளும் பதினொரு மணியிலிருந்து காத்துக் கிடக்கிறாக. நம்ப ஊருதானுங்களாம். கொஞ்சம் மனசு வச்சி அஞ்சு நிமிஷம் பார்த்து அனுப்பி விடுங்க. மத்தவங்களைப் போகச் சொல்லிப்பிடறேன்!" என்றான்.

எனக்கோ கடும் பசி; சொல்ல முடியாத களைப்பு வேறு. இனி ஒரு நிமிஷம் அங்கிருந்தாலும் பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது.

சினத்தின் கேட்டைப் பற்றி நமக்குத் தெரியும்தான். ஆனாலும் உணர்ச்சி மிஞ்சி விடும்போது அதனை அடக்கி ஆளுவது தான் எத்தனை கஷ்டமான காரியம்! இடை வேளை ஆகாரத்துக்குக் கூடச் செல்லாமல் நானும் இன்று காலையிலிருந்து வருபவர்களுக் கெல்லாம் பேட்டி யளித்துக் கொண்டேதானிருக்கிறேன். மணி ஐந்து ஆகியும் இன்னும் பத்துப் பேர் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றால் பொறுமை எல்லை மீறியதில் அதிசய மென்ன இருக்கிறது?

இத்தனைக்கும் நான் ஒரு மந்திரியோ, கல்லூரி பிரின்ஸிபாலோ அல்ல. பெண்கள் உயர்தரப் பள்ளிக்கூட மொன்றின் தலைவி. இதை யொட்டி விதவைகளுக்கு ஒரு ஸ்தாபனம். வருஷ ஆரம்பத்தில் இந்த ஸ்தாபனத்தில் இடம் பெற வந்து குவியும் மனுக்கள் தான் எத்தனை! நாட்டில் உணவுக்குப் பஞ்சம், உடுக்கக் கந்தைக்குப் பஞ்சம்! ஆனால் இவைகளுக்குத் தாளம் போடும் இளம் விதவைகளுக்கோ, பஞ்சமேயில்லை!

அப்போது எனக்கு என்னதான் ஒரே அலுப்பாயிருந்தாலும், 'அம்மா, கிழவருக்கு நம்ப ஊருதானுங்களாம்!' என்ற அந்த வார்த்தை என்னைக் கவர்ந்து விட்டது. எனவே, "மற்றவர்களை அனுப்பிவிட்டு அவரை மட்டும் ஒரு பத்து நிமிஷம் இருக்கச் சொல்லு; தேநீர் குடித்துவிட்டு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டு, என் உள் அறைக்குச் சென்றேன்.

★

'எங்கள் ஊர்' என்பதிலேதான் எத்தனை பெருமை! அது என்னதான் கழுதை மேயும் குப்பைக் காடாக இருக்கட்டும், 'எங்கள் ஊர்' என்ற பெருமையும் வாத்ஸல்யமும் யாருக்கும் இருக்கத்தான் செய்யும். தாமிரபரணி நதிக் கரையில் வளமும் வனப்பும் கொண்டு அமைந்திருந்தது எங்கள் ஊர். முத்துச் சிப்பி என்ற அதன் பெயர் ஒன்றின் அழகே போதும். என் தகப்பனார் ஊர் நாட்டாண்மைக்காரர். அவர் பெயருக்கு அந்தப் பிரதேசத்தில் ஒரு தனிச் செல்வாக்கு. அன்று எங்களுக்குச் சொந்தமாயிருந்த விசாலமான பூமிகள் இன்று வேறு யாருடையனவோ? நான் பிறந்த அந்தப் பூமியை விடுத்து இன்று இருபது வருடங்களுக்கு மேலாகவே ஆகிறது. ஆனால் அந்த ஊரைப் பற்றி நானே நினைத்துக்கொண்டாலோ, அல்லது யாராவது ஞாபகப்படுத்தினாலோ, ஒரே ஒரு கேள்வி மட்டும் என் மனதில் பிறக்கும்—'மாது என்ன ஆனான்?' என்று!

ஆனால், அதற்கு விடை தெரிந்துகொள்ள நான் முயற்சிப்பதில்லை. ஏனெனில், அதைத் தெரிந்து கொள்வதில் எனக்கு இருந்த ஆர்வத்துக்குச் சமமாகவே அச்சமும் இருந்தது.

பால்யமும் விருத்தாப்பியமும் வாழ்க்கையின் இரு கரைகள். நடுவேயுள்ள ஆறு யௌவனம். இதனை நீந்துவதிலுள்ள ஆனந்தத்திற்கு இணையுமில்லை, ஈடுமில்லை. ஆனால் அந்த ஆனந்தத்தைப் பகிர்ந்து கொள்ள—ஆபத்தில் கைகொடுத்து உதவ—ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணும் துணை

வேண்டும் என்று இயற்கை விதித்திருக்கிறது. விதி வசத்தினால் இந்தத் தோழமையைப் பெறவிட்டால் நம்மை விழுங்கக் காத்திருக்கும் முதலைகளும், அடித்துக் கொண்டு போகக் கூடிய சுழல்களும்தான் எத்தனை எத்தனை!

எங்கள் வீட்டுக்கு அடுத்த வீடு ஜகதீச சாஸ்திரிகளுடையது. அவருடைய பெண் கோமதி எனக்கு வயதொத்தவள். தன் விதவைச் சகோதரியையும், அவள் மகன் மகாதேவனையும் தன்னிடம் வைத்துக்கொண்டு, அவர்களுக்கிருந்த சொற்ப நில புலன்களை மேற்பார்வை பார்த்து, அவர்களை ஆதரித்து வந்தார் சாஸ்திரிகள்.

மகாதேவனை நாங்கள் எல்லோரும் மாது என்றுதான் அழைப்போம். எங்களைவிட அவன் நாலைந்து வயது மூத்தவன்; எங்கள் விளையாட்டுத் தோழன். வயது வந்த பிறகு அவனுக்குக் கோமதியை விவாகம் செய்விக்கப் போவது யாருமே யூகித்துக் கொள்ளக் கூடிய விஷயமாயிருந்தது.

இயற்கையழகில் கோமு என்னைக் காட்டிலும் சிறந்தவள். ஆனால் பொன்னும் பட்டும் இயற்கையழகை மிகைப்படுத்திக் காட்டுவதால், எங்களை ஒன்றாகக் காணும்போது யாரும் என்னையே அதிகமாகக் கவனிப்பார்கள். இதனால் நான் அவளைக் காட்டிலும் அழகி என்ற அபிப்பிராயம் எனக்கு அப்போது இருந்தது.

‘மாப்பிள்ளை சகல லக்ஷணங்களும் அமையப் பெற்றிருக்கிறான்; ஆனால் கண் மட்டும் குருடு’ என்பதுபோல், தெய்வம் எனக்கு மகத்தான ஒரு குறையை வைத்துவிட்டது.

அதாவது, என் எட்டாவது வயதில் நான் விதவையாகி விட்டேன்!

அதை நான் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. ஏதோ சில சடங்குகளில் கலந்துகொள்ள நான் அனுமதிக்கப் படவில்லை என்பதைத் தவிர, அதை ஒரு துர்ப்பாக்கியம் என்று என் சிறுமியுள்ளம் அப்போது உணரவில்லை.

கண்ணினுள் இருக்கும் கருமணியைப் போல நம்மிடம் அன்பு செலுத்திப் போற்றும் பெற்றோர், சில சமயம் வெறும் அறியாமையினால் நம் உள்ளத்துக்குத் தீராக் கேட்டை யுண்டாக்கி விடுவதுண்டு. இதை அவர்கள் உணராமலிருக்கலாம். ஆனால் கண்ணுக்குத் தெரியாமல் பழத்துக்குள் இருந்துகொண்டு அதனை அரித்துத் தின்னும் வண்டைப்போல இது நம் உள்ளத்தைச் சொத்தையாக்கி விடுவது மட்டும் உண்மை!

★

வாழ்க்கையின் வஸந்த ருது கோமுவையும் என்னையும் ஸ்பரிசிக்கத் தொடங்கி விட்டது. எங்கள் படிப்பு அத்துடன் நின்றது. மாது அப்போது திருநெல்வேலி கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான். அவன் விடுமுறைக்கு வரும்போதெல்லாம் விளையாட்டும் வேடிக்கையுமாக நாங்கள் பொழுதைப் போக்குவோம். அவன் அப்படி ஒருநாள் எங்கள் வீட்டுக்கு வந்து சென்ற பிறகு, அம்மா என்னை அழைத்தாள்.

“புவனா! இதோ பார், நீ இனிமேல் மாதுவோடு இப்படியெல்லாம் சிரிச்சு விளையாடப் படாது!’ என்றாள் அவள் கடுமையான குரலில்.

அவள் சொன்னதன் பொருள் விளங்கவே எனக்கு அப்போது ஒரு கிலேசமாயிற்று. ஆம்; அன்றுவரை நான் மாதுவிடம் கொண்டிருந்த புனிதமான — மாசு மறுவற்ற — அன்பு அந்த கிலேசத்தில்தான் களங்கமடைந்தது!

அன்று முதல் நான் வீட்டில் அடைபட்டுக் கிடக்கலானேன். கோமு என் வீட்டைத் தேடி வந்தால் அவளுடன் ஏதோ அசிரத்தையாகப் பேசுவேன். இதற்குப் பிறகு மாதுவை அந்த விடுமுறையில் நான் பார்க்கவே யில்லை.

அடுத்த விடுமுறையும் வந்தது. மீண்டும் இந்த அர்த்தமற்ற பகிஷ்கரிப்பில் இறங்கினேன். இடையில் மனதை ஈடுபடுத்த வேறு விஷயமில்லாமையாலும், கண்ட கண்ட கதைப் புத்தகங்களை வாசித்து வந்தமையாலும் மாதுவிடம் நான் காதல் கொண்டுவிட்டதாக ஒரு பிரமை யுண்டாகியிருந்தது. கோமு யுக்த வயதை யடைந்து விட்டபோதிலும், பெற்றோர் மாதுவின் விருப்பத்துக் கிணங்க அவன் ‘மேஜ’ரான பிற்பாடே விவாகம் செய்விப்பதா யிருந்தார்கள். நானோ என்னவெல்லாமோ பகற் கனவுகள் கண்டு மனதைக் குழப்பிக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் கோமு என்னிடம் வந்து, “என்னடி இது? மாது ரொம்ப வருத்தப் படுகிறானே! நீ கோபித்துக் கொள்ளும் படியாக அவன் ஏதாவது சொல்லியிருந்தால் தன்னை மன்னித்து விடவேண்டும் என்று உன்னிடம் சொல்லச் சொன்னான்.

வாயேன், எங்கள் அகத்துக்குப் போவோம்!" என்றான்.

நான் இன்னொரு நாள் வருவதாகச் சாக்குச் சொல்லி அவனை யனுப்பினேன். ஆனால் மாது எனக்காகக் காத்திருக்கவில்லை. என்னைத் தேடியே வந்துவிட்டான். என்னைப் பார்க்க அவன் அப்படித் துடித்ததை நான் என் மனநிலைக்கு ஏற்ற மாதிரி கற்பனை செய்து கொண்டேன்.

அவன் வந்தபோது அம்மா பின்கட்டில் ஏதோ வேலையாக இருந்தாள். அப்பா வெளியே போயிருந்தார். நான் திடுக்கிட்டு எழுந்து நின்றேன். அவன் சற்றுத் தயங்கி விட்டுப் பின், "புவனு, இது என்ன? உனக்கு என்ன வந்து விட்டது?" என்று கேட்டான்.

"பெரிதாகத்தான் வந்துவிட்டது!" என்றேன் ஆத்திரத்துடன்.

அவன் கண்களை அகல விரித்தான் — 'எனக்கு விளங்கவில்லை' என்ற பாவனையாக.

எனக்குக் கோபம் கோபமாய் வந்தது. "இந்தப் புருஷர்கள்தான் என்ன வேஷக்காரர்கள்! உனக்கு...உங்களுக்கு......இன்னுமா விளங்க வில்லை? நான் உங்களை ......உங்களை...!" என்று தடுமாறினேன்.

இதைக் கேட்ட மாதுவின் முகத்தில் சொல்ல முடியாத வியப்பு தென்பட்டது. அவன் அநுதாபம் நிறைந்த குரலில், "புவனு, இன்றுவரை என் சொல்லிலாகட்டும், செயலிலாகட்டும், நீ சகோதரத்துவத்தைத் தவிர வேறு தவறான பாவத்தைக் கண்டிருக்க முடியுமா? இது என்ன அசட்டுத்தனம்?" என்று கேட்டான்.

"வேஷம், வேஷம்! அத்தனையும் கோழைத்தனம்! நான் ஒரு விதவையாக இல்லாவிட்டால் அது வேறு 'தவ'மாக இருந்திருக்குமில்லையா?" என்று நான் கத்தினேன்.

"புவனு! மெள்ள, மெள்ள! உன் மனம் இப்படித் திடீரென்று மாறாத

...லடையும் என்று தெரிந்திருந்தால், நான் முன்னமேயே ஜாக்கிரதையாக இருந்திருப்பேன். நீ கல்வி யறிவில்லாத மூடமல்ல. கொஞ்சம் யோசித்துப் பார்! நாம் காதலிப்பதாகவே வைத்துக்கொண்டு, விவாகமும் செய்து கொண்டோம் என்று வைத்துக் கொள். வாழ்க்கையிலே நிரந்தரமான இன்பத்தைக் காண முடியும் என்று நீ நினைக்கிறாயா? பெரியோர்களை விரோதித்துக் கொண்டு, சமூக பகிஷ்காரத்துக்கும் ஆளாகி, ஏழைகளான பின் நாம் தலை நிமிர்ந்து என்றாவது வாழ முடியுமா? சொல்ல முடியாத வறுமைக்கும் பச்சாதாபத்துக்கும்தான் நாம் ஆளாக நேரிடும். என்னை வீணாய்ப் பைத்தியமாக அடித்து விடாதே!" என்றான்.

அவன் சொல்வதில் எந்த விதமான அர்த்தமும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. தர்ம சங்கடமான தன்னுடைய நிலையிலிருந்து தான் தப்பித்துக்கொள்ள அவன் ஏதோ கதைக்கிறான் என்றே எனக்குத் தோன்றிற்று. 'பரஸ்பரம் ஒருவரையொருவர் விரும்பி வாழ்க்கைப் பிரயாணத்தைத் துவக்கிவிட்டால், வழியில் எத்தனை துன்பங்கள் நேர்ந்தால்தான் என்ன? அன்பினால் பிணைக்கப்பட்டுவிட்ட ஜீவன்



களை அவை என்ன செய்துவிட முடியும்?" என்று நான் எண்ணினேன். ஆகவே, "பைத்தியமா! என்னைத்தான் நீங்கள் அரைப் பைத்தியமாக்கி விட்டீர்களே! நீங்களும் என்னைப்போல் பைத்தியமாகிப் பாயைப் பிராண்டினால்தான் என் மனம் சமாதான மடையும்!" என்றேன்.

அவனுடன் நான் கடைசி கடைசியாகப் பேசின வார்த்தைகள் அவைதான். இதற்குள் வாசற் பக்கம் அப்பாவின் குரல் கேட்டது. மாது வெளியே போய் விட்டான்.

எனக்காக அவர்கள் விவாகம் நின்றுவிடவில்லை; கோலாகலமாக நடந்தது. மாதுவுக்கு மதுரையில் வேலை கிடைக்கவே, அவர்கள் எங்கள் ஊரை விட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார்கள்.

அதற்குப் பிறகு நான் என் தந்தையை இழந்து, தாயுடன் பட்டணம் வந்து சேர்ந்தேன். விட்டுப் போன என் படிப்பைத் தொடர்ந்துபடித்துப் பட்டமும் பெற்றேன்.

நான் அன்று படித்த அதே ஸ்தாபனத்தின் தலைவியாகத்தான் இன்று நிர்வாகம் செய்து வருகிறேன். சென்ற வருஷம் தான் என் தாயார் காலமாகி விட்டாள். அப்பப்பா! இந்த ஏகாந்தத்தில்தான் எத்தனை துன்பம்!

தேநீர் அருந்திவிட்டு நான் மீண்டும் என் அறைக்கு வந்தேன். அங்கே சுவரோரத்தில் போட்டிருந்த பெஞ்சியின்மேல் அந்தக் கிழவரும், அம்மாளும் உட்கார்ந்திருந்தார்கள். அவளைக் கண்டதும் எனக்கு ஒரு வேதனை நிறைந்த சிரிப்பு வந்தது. "இவ்வளவு பெரியவளை எங்கள் ஸ்தாபனத்தில் சேர்த்துக் கொள்ள முடியாதே, என்ன செய்யட்டும்?" என்றேன்.

அவர் கெஞ்சும் குரலில், "அவள் இனி மேல் படித்துக் கிழித்து முன்னுக்கு வர வேணும் என்ற உத்தேசத்துடன் வரவில்லை, அம்மா! ஏதோ உங்கள் ஸ்தாபனத்தில் சமையலோ, வேறு ஏதாவது உங்களுக்கு உதவியாக வேலை செய்யவோ வைத்துக் கொள்ளுங்கள். அவளுக்கும் அவள் குழந்தைக்கும் சோறும் துணியும் கிடைத்தால் போதும்; சம்பளம் ஒன்றும் வேண்டாம். பார்க்கப் போனால் இவள் எனக்கு உறவுகூட இல்லை. எங்கள் வீட்டில் நெடுநாள் குடியிருந்து வந்தாள். பெற்ற மகளைப் போல அவளிடத்தில் எனக்கொரு பாசம். அவள் கணவன் நல்ல வேலையில்தான் இருந்தான். இந்த ஆகஸ்டுக் கலவரங்களைப் பற்றித்தான் உங்களுக்குத் தெரியுமே! அது நடந்தபோது எங்கள் ஊரில் கலெக்டர் உத்தரவை மீறி ஒரு கூட்டம் போட்டார்கள். போதாத காலம், அவன் அதற்குச் சென்றான். போலீஸ் தடியடிப் பிரயோகம் செய்தது. அதில் அவன் சிக்கிக் கொண்டான். மண்டையிலே பலத்த காயம் பட்டு ஆஸ்பத்திரியிலே பிரக்ஞை யில்லாமல் ஒரு வாரம் கிடந்தான். கடைசியில் எப்படியோ பிழைத்தெழுந்தான்; ஆனால், சித்த சுவாதீனம் போய்விட்டது. என்னவெல்லாமோ வைத்தியம் செய்து பணத்தைக் கரைத்தோம். ஒவ்வொரு சமயம் ஒரு அரைமணி, ஒருமணி நேரம் தெளிந்த புத்தியுடன் இருப்பான். அப்படி ஒரு முறை தெளிவாயிருந்தபோது அருகில் யாருமில்லாம லிருக்கவே தற்கொலை செய்துகொண்டு விட்டான்!" என்றார்.

அதுவரை அவள் வாயைத் திறக்கவே யில்லை. மௌனமாக அழுது கொண்டே யிருந்தாள். கிழவர் நிறுத்தினதும் அவள் என்னைப் பார்த்து, "புவனா! உனக்கு என்னைத் தெரியவில்லையா?" என்று விக்கினாள்.

அவ்வளவுதான்; அதுவரை அந்த ஸ்தாபனத்தின் தலைவி என்ற முறையில் அதிகார உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த நான், அவளுடைய பால்ய சிநேகிதி என்ற முறையில் அன்பு உலகத்துக்கு வந்தேன். சட்டென்று எழுந்து சென்று, முற்றிலும் உருமாறிப் போயிருந்த அவள் அருகில் உட்கார்ந்து, அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டேன்.

"......நீங்களும் என்னைப்போல் பைத்தியமாகிப் பாயைப் பிராண்டினால்தான் என் மனம் சமாதான மடையும்!" என்று நான் அன்று மாதுவுக்குக் கொடுத்த சாபம் இவ்வளவு பயங்கரமாகப் பலிக்குமென்று நான் கொஞ்சமும் எதிர்பார்க்க வில்லை. அதைக் கேட்டு நான் அன்று நினைத்தது போல் இன்று என் உள்ளமும் சமாதான மடையவில்லை. அதற்குப் பிராயச்சித்தமாகத்தான் கடவுள் இன்று கோமுவை நம்மிடம் அனுப்பி வைத்திருக்கிறார் என்றே நான் நினைத்தேன். என்னால் இயன்ற வரை ஆறுதலான வார்த்தைகள் கூறி அவளைத் தேற்றினேன். அவளுடைய குழந்தையையும் என்னிடமே கொண்டு வந்து வைத்துக் கொண்டேன்.

கோமதியிடமும் அவள் குழந்தை ஜகதீசனிடமும் எனக்கு நாளடைவில் ஏற்பட்ட பாசத் தளையில், என் ஏகாந்த வாழ்க்கையில் இருந்த ஏக்கம் மறைந்தே விட்டது!



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

ரமேஷ்பாபு அவ்வாறு கேட்டது, ரமாநாத்துக்கு என்னவோ போல் இருந்தது. அவன் மென்று விழுங்கிக் கொண்டே, "அதற்காகத்தான் உங்களிடம் வந்தேன். இதுவரை ஒன்றும் ஏற்பாடு செய்ய முடியவில்லை!" என்று இழுத்தான்.

"நல்ல ஆள் அப்பா, நீ! உன் அப்பாவிடம்கூடச் சொல்ல வெட்கப்பட்டால் காரியம் எப்படி நடக்கும்? முன்னால் இரண்டு வசவு உனக்கு கிடைக்கத்தான் கிடைக்கும். இருந்தாலும் இந்தச் சங்கடத்திலிருந்து உன்னைக் காப்பாற்றி விடுவாரல்லவா? ஆகையால் அவரிடம் போய்ச் சகல விஷயத்தையும் விவரமாகச் சொல்லு. இம்மாதிரித் தவறுதல்கள் நடப்பது சகஜம். அதற்காகப் பயந்தால் கட்டி வருமா? உன்னால் முடியாது என்றால் நான் போய் வேண்டுமானால் சொல்லுகிறேன்" என்றார் ரமேஷ்பாபு.

"அவரிடம் சொல்லுவதாயிருந்தால் நான் எப்பொழுதோ சொல்லியிருப்பேனே! ஆமாம், நீங்கள் எனக்காக ஏதாவது ஏற்பாடு செய்யக் கூடாதா?"

"செய்யலாம்; ஆனால் உன்னைப் போன்றவர்களிடம் எனக்கு அனுதாபமே கிடையாது. ஆகையால் இந்த விஷயத்தில் நான் உனக்கு ஒத்தாசை செய்யத் தயாராயில்லை. என்னிடம் சொல்லுகிற விஷயத்தை நீ உன் அப்பாவிடம் சொல்ல முடியாது என்றால் என்ன அர்த்தம்? நான் சொல்லுவதைக் கேள்: அவரிடம் போய் விஷயத்தைச் சொல்லு. அவர் பணம் தரவில்லையென்றால் என்னிடம் வா; நான் தருகிறேன்" என்றார் ரமேஷ்பாபு.

ரமாநாத்துக்கு அவரிடம் அதற்குமேல் பேசத் துணிவு ஏற்படவில்லை. 'இத்தனை நெருங்கிப் பழகிய பின்னரும்கூட இவருக்குத்தான் என்ன கல் நெஞ்சம், பார்!' என்று எண்ணிக்கொண்டு அவன் அங்கிருந்து எழுந்தான். அவனுக்கு என்ன செய்வதென்றே ஒன்றும் புரியவில்லை. அவனுடைய மூளை ஒரேயடியாகக் குழம்பிப் போய்விட்டது. 'எங்கே போகிறோம்; என்ன செய்கிறோம்?' என்றுகூடப் புரியாமல், அவன் சந்து சந்தாகப் புகுந்து நடக்கலானான்.

திடீரென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. 'பத்மாவுக்குத் தன் கஷ்டங்களையெல்லாம் விவரித்து ஒரு கடிதம் எழுதினால் என்ன?' என்று அவன் எண்ணினான். 'நேரில்தான் அவளிடம் ஒன்றும் சொல்ல முடியவில்லை. கடிதத்தில் கூடவா எழுத முடியாது?' என்ற எண்ணம் உதிக்கவே, அவன் வெகு வேகமாக வீட்டையடைந்து தன் அறையில் உட்கார்ந்து கடிதம் எழுதலானான்:—

"அன்புள்ள பத்மாவுக்கு, நான் என்ன சொல்லுவேன்! ஒரு பெரிய இக்கட்டில் மாட்டிக்கொண்டு விட்டேன். இன்னும் ஒரு மணி நேரத்துக்குள் நான் முந்நூறு ரூபாய்க்கு ஏற்பாடு செய்தாக வேண்டும். இல்லாவிட்டால் கைகளில் விலங்கு மாட்டப்பட்டு விடும். யாரிடமாவது கடன் வாங்கிக் கட்டிவிடலாம் என்று எத்தனையோ முயற்சிகள் செய்து பார்த்து விட்டேன்; கிடைக்கவில்லை. இந்தச் சமயம் நீ உன்னுடைய நகைகளில் இரண்டொன்றைக் கொடுத்து உதவினால், எங்கேயாவது அடகு வைத்துத் தப்பிவிடலாம். கைக்குப் பணம் வந்ததும், முதல் காரியமாக உன் நகைகளை மீட்டுக் கொடுத்து விடுகிறேன். இந்த மாதிரி நிர்ப்பந்தம் ஏற்படாமலிருந்தால் உனக்கு இந்தச் சிரமத்தை நான்

அணிந்தே யிருக்க மாட்டேன். நீ நகை கொடுத்தால் சீக்கிரமே மீட்டுத் தந்து விடுகிறேன்......"

இவ்வாறு அவன் கடிதம் எழுதி முடிப்பதற்குள்ளாகவே, ரமேஷ் பாபு சிரித்துக் கொண்டே உள்ளே வந்து உட்கார்ந்தார்.

ரமேஷ் பாபு வந்ததும் வராததுமாக, ரமாகாந்தை நோக்கி, "விஷயத்தை உன் அப்பாவிடம் சொன்னாயோ?" என்று கேட்டார்.

ரமாகாந்த் தலை குனிந்தவாறே, "இன்னும் சொல்லவில்லை; சந்தர்ப்பம் சரியாயில்லை!" என்றான்.

"சரியான சந்தர்ப்பம் கிடைக்க இன்னும் ஐந்தாறு நாட்கள் ஆகுமோ? இன்றைக்கு நீ பணத்தோடு வராமல் வெறுங் கையோடு ஆபீஸுக்கு வந்தால், அப்புறம் அனர்த்தம் தான்!" என்றார் ரமேஷ் பாபு.

"அவரிடம் சொல்லிப் பணம் வாங்குவது என்று தீர்மானித்த பிறகு, உங்களுக்கு என் கவலை?"

"அதிருக்கட்டும்; இன்றைக்குச் சௌகரியப்பட்டால் ரத்தனிடம் போய் நம் விஷயத்தைப் பற்றிச் சொல்லிவிட்டு வாயேன். அன்றைக்கே நான் உனக்குப் படித்துச் சொன்னேன், நீ நான் சொன்னதை மறந்தே போய் விட்டாய் போலிருக்கிறதே!"

"மறக்கவில்லை; சொல்வதற்குத்தான் சங்கோசமாக இருக்கிறது!"

"இதென்ன எழவெடுத்த சங்கோசம்? அப்பாவிடம் சொல்லுவது என்றாலும் சங்கோசம்! ரத்தனிடம் பேசுவதென்றாலும் சங்கோசம்! நமக்கு வேண்டியவர்களிடத்திலேயே இப்படியெல்லாம் நாம் சங்கோசப்படுவதனால்தான் பல காரியங்கள் குட்டிச்சுவராய்ப் போய்விடுகின்றன!" என்று அலுத்துக் கொண்டு வெளியே சென்றார் ரமேஷ் பாபு.

அவர் அங்கேயிருந்து போன பிறகு, ரமாகாந்த் அந்தக் கடிதத்தை எடுத்துச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டு பத்மாவிடம் கொடுக்கும் நோக்கத்துடன் உள்ளே சென்றான். அப்பொழுது பத்மா யாருடைய வீட்டுக்கோ புறப்பட யத்தனம் செய்து கொண்டிருந்தாள். அவள் தன்னிடம் இருந்த நல்ல புடவையொன்றை அப்போது உடுத்தி யிருந்தாள். கைகளில் கல்லிழைத்த கங்கணமும், கழுத்தில் சந்திரஹாரமும் எறிபிருந்தன. ரமாகாந்த் உள்ளே நுழைந்தபொழுது, அவள் தனக்கு எதிரே ஒரு கண்ணாடியை வைத்துக் கொண்டு, காதுகளில் கம்மல்களை அணிந்து கொண்டிருந்தாள். ரமாகாந்தைப் பார்த்ததும் அவள், "இன்று காலையில் எழுந்திருந்தவுடன் பல்கூடத் தேய்க்காமல் எங்கே போய்விட்டீர்கள்? ஆமாம், நான் பூராவும்தான் வீட்டிலேயே இருக்கிறதில்லையே, காலை வேளையில் கூடவா இருக்கக் கூடாது? நீங்கள் இல்லாவிட்டால் எனக்கு என்னவோ வீடு 'வெறிச்' சென்றிருக்கிறது. பிறந்தகத்துக்குப் போக வேண்டி வந்தால், 'போவதா, வேண்டாமா?' என்று இப்பொழுதுதான் யோசித்துக் கொண்டிருந்தேன். எனக்கு அங்கே இருப்புக் கொள்ளவே கொள்ளாது!" என்றாள்.

"அதிருக்கட்டும்; இப்போது நீ எங்கேயாவது வெளியே போகிறாயா, என்ன?" என்று கேட்டான் ரமாகாந்த்.

"ஆமாம், அந்த ஸேட்ஜீயின் வீட்டில் கூப்பிட்டிருக்கிறார்கள். போய்விட்டு மத்தியானத்துக்குள் வந்துவிடுவேன்" என்றாள் பத்மா.

ரமா அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. அவளுடைய ஆடையாபரணங்களையும் அழகையும் கண்டு சொக்கிப்போய் அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கூர்ந்து பார்ப்பதைக் கண்ட பத்மா சிரித்துக் கொண்டே, "உங்கள் கண்களைக் கண்டாலே எனக்குப் பயமாயிருக்கிறது. திருஷ்டி - கிருஷ்டி போட்டு விடாதீர்கள்!" என்றாள்.

ரமாகாந்தின் மனம் ஒரே தாவாகத் தாவி உண்மை உலகத்தை விட்டுக் காவியமும் கற்பனையும் நிறைந்த உலகத்திற்குச் சென்று விட்டது. 'இவளோ தன் மகிழ்ச்சியில் பூரித்திருக்கிறாள். இந்தச் சமயத்திலா நாம் நமது கடிதத்தைக் கொடுத்து அவளுடைய இன்பக் கனவைக் குழி தோண்டிப் புதைக்க வேண்டும்?' என்று அவன் தன் மனதையே கேட்டுக் கொண்டான். தன்னை மறந்து இன்னிசை பாடிக் கொண்டிருக்கும் பறவையைச் சுட்டுத் தள்ளுவதற்கு, அவன் இரக்கமற்ற வேடப் பிறவியில் பிறக்கவில்லையே! அன்றலர்ந்த புஷ்பத்தைப் பறித்துக் கசக்கி யெறிவதற்கு, அவன் ரசிக உணர்ச்சியே இல்லாதவன் அல்லவே! அவன் அவளுக்காக மாபெரும் கஷ்டங்களைக் கூடப் பொறுத்துக் கொள்ளுவதற்கும், ஊராரின் ஏச்சுக்களைக் கேட்ப

தற்கும், தன் வாழ்க்கையையே பணயமாக வைப்பதற்கும் கூடத் தயாரா யிருந்தான். எனவே, இந்தச் சந்தர்ப்பத்தில் தன்னுடைய நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு, பத்மாவின் உள்ளத்தைப் புண்ணாக்க அவனுடைய மனம் சிறிதும் இடம் கொடுக்கவில்லை. ஆகவே அவன் அன்பு ததும்பும் குரலில், "நான் எதற்குத் திருட்டுப் போடப் போகிறேன்? உன்னைக் கோயிலில் வைத்தல்லவா உன்னைப் பூஜிக்கப் போகிறேன்!" என்றான்.

இந்தச் சொற்களைக் கூறும்பொழுது அவனுக்குத் தன் சகல கவலைகளும், இன்னல்களும் அறவே ஒழிந்து விட்டது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அன்பும் சங்கோசமும் சேர்ந்துகொண்டு அவளை அதற்குமேல் பேச விடவில்லை.

பத்மா கீழே இறங்குவதற்காகத் திரும்பினாள். ரமாகாந் உடனே அவளைப் பிடித்துத் தன் பக்கத்தில் இழுத்துக் கொண்டு, 'இனிமேல் நமக்கு இந்த பாக்கியம் எங்கே கிட்டப் போகிறது?' என்ற எண்ணத்துடன் இறுகத் தழுவிக் கொண்டான். 'இதுதான் கடைசி ஆலிங்கனமாக இருக்குமோ, என்னவோ? யார் கண்டது?' என்ற எண்ணத்தில் அவன், சாகுந் தறுவாயில் இருக்கும் ஒரு கருமி தன் இரும்புப் பெட்டியின் சாவிக் கொத்தைக் கெட்டியாகத் தன் பலம் கொண்டமட்டில் அழுத்திப் பிடித்துக் கொள்ளுவதைப் போல, அவளை அவன் இன்னும் இறுகத் தழுவிக் கொண்டான். கருமியின் கையிலிருக்கும் சாவிக் கொத்தைப் பிடுங்கிவிட்டால், அவனுடைய உயிரேயல்லவா போய்விடும்!

பத்மா ஆசை ததும்பும் கண்களுடன் ரமாகாந்தைப் பார்த்து, "கொஞ்சம் பணம் இருந்தால் கொடுக்களேன்! எதற்கும் கையோடு இருக்கட்டும்!" என்று கேட்டாள்.

இதைக் கேட்டதும் ரமாகாந்துக்குத் தேள் கொட்டியது போலிருந்தது. "பணமா! இப்பொழுது என் கையில் இல்லையே!" என்றான்.

"எல்லாம் இருக்கிறது. எதற்காகப் புளுகுகிறீர்கள்? இரண்டே இரண்டு ரூபாய் கொடுங்கள், போதும்" என்று சொல்லிக் கொண்டே, பத்மா ரமாகாந்தின் சட்டைப் பையில் கையை விட்டு அதிலிருந்த சில்லறையுடன் அந்தக் கடிதத்தையும் எடுத்துக் கொண்டாள்.

ரமாகாந் கையை நீட்டி அதை வாங்கிக் கொள்ளும் நோக்கத்துடன், "அந்தக் கடிதத்தை மட்டும் கொடுத்துவிடு! அது ஆபீஸ் கடிதம்!" என்றான்.

"என்ன கடிதம்? சொல்லுங்கள்" என்று கேட்டுக்கொண்டே பத்மா மடித்திருந்த அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்த்தாள். அதில் ரமாகாந்தின் கையெழுத்தாக இருக்கவே, "இதுதான் ஆபீஸ் கடிதமோ? எதற்காக இப்படிப் புளுகுகிறீர்கள்? இது உங்கள் கையெழுத்துத் தானே?" என்று கேட்டாள்.

ரமாகாந், "விளையாடாதே! அந்தக் கடிதத்தை இங்கே கொடுத்துவிடு!" என்று சொல்லிக் கொண்டே, அவளுடைய கையிலிருந்து அந்தக் கடிதத்தைப் பிடுங்கிக் கொள்ள முயன்றான். ஆனால் பத்மா கையைப் பின்புறம் கொண்டுபோய், "நான் படித்துப் பார்த்துவிட்டுத்தான் தருவேன். நீங்கள் பிடுங்கினால் கிழித்தே போட்டு விடுவேன்!" என்றாள்.

"சரி, கிழித்தே போட்டுவிடு"

"நீங்களே கிழித்துப் போடு என்று சொல்லுவதனால் நான் கட்டாயம் படிக்கத் தான் போகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே, இரண்டடி பின்னால் நகர்ந்து நின்று, பத்மா கடிதத்தைப் படிக்க ஆரம்பித்து விட்டாள்.

ரமாகாந் அதற்குப் பிறகு அவளுடைய கையிலிருந்து அந்தக் கடிதத்தைப் பிடுங்கிக் கொள்ள முயற்சிக்கவில்லை. ஆகாயமே இடிந்து தன் தலை மீது விழுவது போலவும், ஒரு பயங்கர ஜந்து தன்னைப் பிடித்து விழுங்க வருவது போலவும் அவனுக்கு என்னவெல்லாமோ தோன்றிற்று. உடனே அவன் 'தடதட' வென்று மாடிப் படி இறங்கி வெகு வேகமாக வீட்டை விட்டு வெளியேறினான். நிர்வாணமான மனிதன் ஓடி ஒளிவதற்கு இடம் தேடுவானே, அதுபோல அவனும் யாருடைய கண்களிலும் தட்டுப்படாமல் ஓடி ஒளிந்துகொள்ள நினைத்தான். அவன் நல்ல ஆடைகள் உடுத்தியிருந்தும், அப்போது நிர்வாணமான மனிதனுக்குச் சமானமாகத்தான் இருந்தான். ஏனெனில், அவனுடைய ரகசியங்கள் அனைத்தும்தான் அம்பலத்துக்கு வந்து விட்டனவே! அவன் நடித்த கபட நாடகம் அவ்வளவும்தான் சந்தி சிரிக்க ஆரம்பித்து விட்டதே! எந்த ரகசியங்களை அவன் மிகவும் ரகசியமாக

வைத்துக் கொள்ளுவதற்கு ஆனானப் பட்ட பாடுகள் எல்லாம் பட்டானோ, அவைகளே அம்பலத்துக்கு வந்து அவனுடைய முகத்தில் கரியை அரைத்துப் பூசி விட்டன. அப்படி யிருக்கும்பொழுது, அவன் இனிப் பிறர் முகத்தில் விழிப்பது எப்படி? பத்மா புலம்புவதையும், தந்தை ஆத்திரப் படுவதையும், ஊரார் காதைக் கடித்துக் கொள்ளுவதையும் கேட்டுக் கொண்டு உயிருடன் இருப்பதைவிட, நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாவது எத்தனையோ மேலானது என்று அவனுக்குப் பட்டது. இந்த உலகத்தையே துறந்து ஒழிந்தபின், யார் என்ன பேசிக் கொண்டால் அவனுக்கு என்ன? ஆனால், கேவலம் மூந்நூறு ரூபாய்க்கு வாழ்க்கை இப்படிக் குட்டிச் சுவராவதை நினைக்கும்பொழுது தான் அவனுக்கு மிகவும் வருத்தமா யிருந்தது. தெய்வ சித்தம் அப்படி யிருக்கும் பொழுது, யாரால் அதை மாற்ற முடியும்? தனக்கு வேண்டியவர்களிடத்தி லேயே தாழ்ந்து வாழ்வதைக் காட்டிலும் இறந்து மடிவது எத்தனையோ மேல் என்று அவனுக்குப் பட்டது.

பத்மா அவனை நீசன், அற்பன், கபடன், வஞ்சகன், மோசக்காரன் என்றெல்லாம் எண்ணி விடுவாளோ! அப்புறம் அவன் அவளுடைய முகத்தில் எப்படி விழிக்க முடியும்?

அவனுக்குத் தன் வாழ்க்கையை மறு படியும் புதுமுறையில் தொடக்கவும், உலகத்தை வெறுத்துத் தனித்துத் தன் வாழ் நாட்களைக் கடத்தவும், போலீஸாரின் கையில் அகப்படாமல் தலை மறைவாய் வாழவும் சௌகரியமான இடம் இந்த மாபெரும் புவியில் கங்கை நதியைவிட்டால் வேறொன்று இருப்பதாகவே தோன்ற வில்லை. அவன் உயிருடன் இருந்தால் எப்படியும் பிடிபட்டுத்தானே தீருவான்? பிடிபட்டு விட்டால் அவனுடைய நிலைமை என்ன ஆகும்? கைவிலங்கு மாட்டப்பட்டுக் கோர்ட்டில் நிறுத்தப்பட மாட்டானா? அவன் இரு புறத்திலும் போலீஸ் சேவ



கர்கள் நின்றுகொண்டு 'பாரா' கொடுக்க ஆரம்பித்து விட மாட்டார்களா? அது மட்டுமா, அந்த வேடிக்கையைப் பார்ப்பதற்காக ஊரே ஒரேயடியாய்க் கூடும். பத்மா வருவாள், ரத்தன் வருவான், அவனுடைய அப்பாவும் வருவார்! உற்றார் உறவினர், நண்பர்கள், வேண்டியவர்கள் வேண்டாதவர்கள் அனைவருமே முகங்களில் பலவித பாவங்கள் தாண்டவமாட அந்தக் கண்ணராவிக் காட்சியைக் காண்பதற்குத் 'திமு திமு' என்று வந்து கூடிவிடுவார்களே!

இதை எண்ணியதும் ரமாகாந்துக்கு, 'சீ! இப்படி மானத்தைப் பறி கொடுத்து விட்டு உயிர் வாழ்வதைக் காட்டிலும், ஏதாவது குளம் குட்டைகளில் விழுந்து உயிரை விட்டு விடுவதே மேல்' என்று பட்டது. ஆனால் அடுத்த கணமே, 'ஆமாம், பத்மாவை யார் கவனித்துக் கொள்ளுவார்கள்? நாம் கெட்டது போதாதென்று அவளையும் அல்லவா கெடுத்து விட்டோம்! அம்மா - அப்பாவாவது இரண்டொரு நாட்கள் அழுதுவிட்டு, அப்புறம் எப்படியாவது மனதைத் தேற்றிக்கொண்டு விடுவார்கள். ஆனால் அவள் கதி என்ன ஆகும்?—ஆமாம், இந்த நகர வாழ்க்கையை விட்டுவிட்டு, வெகு தொலைவில் உள்ள ஏதாவதொரு பட்டிக்காட்டுக்குச் சென்று அங்கே நாம் அஞ்ஞாத வாசம் செய்ய முடியாதா? கொஞ்ச காலம் கழிந்தபின், பத்மாவும் நம்மீது இரங்கி நம் குற்றங்களையெல்லாம் மன்னித்தாலும் மன்னித்து விடுவாள். நாமும் இப்படியேதான் இருந்து கொண்டிருக்கப் போகிறோம் என்பது என்ன நிச்சயம்? என்றைக்காவது ஒரு நாள் நம் கையிலும் நாலு காசு சேர்ந்து விடக் கூடாதா? என்ன சேர்ந்து என்ன? அவளுடைய முகத்தில் விழிப்பது என்பது ரொம்பவும் சிரமம்தான். ஆமாம், அவள் இப்பொழுது என்ன செய்து கொண்டிருப்பாள்? ஒருவேளை நம் கடிதத்தைப் படித்துக் கொண்டிருப்பாளோ? படித்துக் கொண்டிருக்கவாவது? படித்து முடிப்பதற்கு வேண்டிய நேரமாகிவிட்டதே! அவள் அதைப் படித்ததும் ஒரேயடியாகப் பயந்துபோய், அம்மாவிடம் ஓடிப்போய் விஷயத்தைச் சொல்லியிருப்பாள். அப்பாவை அழைத்து வரப் பையன்கள் ஓடியிருப்பார்கள். அவர் வந்ததும் வராததுமாக என்னைத் தேடிக் கண்டுபிடிக்க மூலை முடுக்குகளுக்கெல்லாம் ஆள் அனுப்பியிருப்பார். ஆமாம், இந்தப் பக்கமும் யாராவது வந்து விட்டால்?......

இப்படியெல்லாம் அவன் என்னவெல்லாமோ எண்ணிக்கொண்டே, அந்தக் கொளுத்தும் வெய்யிலில் முன்னும் பின்னும் வெகு நாழிகையாகப் பார்த்துக் கொண்டு காலை எட்டிப் போட்டுக் கொண்டிருந்தான். 'எங்கே போகிறோம்' என்ற சிந்தனையே அவனுக்கு இல்லை. ரயில் எஞ்சின் ஊதும் சத்தத்தைக் கேட்டு அவன் துணுக்குற்று, 'அடே, நாம் இவ்வளவு தூரம் வந்து விட்டோமா?' என்று எண்ணினான். ரயில் வண்டி அவனுக்கு எதிர்த்தாற்போல நின்று கொண்டிருந்தது. அதைப் பார்த்ததும் அவனுக்கு 'இதில் ஏறி உட்கார்ந்துவிட்டால் நம் மனச்சுமையெல்லாம் இறங்கி விடுமோ?' என்ற எண்ணம் உதித்தது. ஆனால், அவனுடைய சட்டைப் பையிலோ பணம் இல்லை. விரலில் ஒரு மோதிரம் மட்டும் இருந்தது. அவன் ஸ்டேஷனை யடைந்து, அங்கே நின்று கொண்டிருந்த ஒரு ரயில்வே போர்ட்டரைக் கூப்பிட்டு, "என் அப்பா, இந்த மோதிரத்தை விற்றுத் தர முடியுமா? உனக்கு ஒரு ரூபாய் இனாம் தருகிறேன். எனக்கு அவசர ஜோலியாக இந்த வண்டியில் போகவேண்டும். கையில் கொண்டு வந்த பணம் எங்கேயோ வழியில் விழுந்து விட்டது. வீட்டுக்குப் போய்ப் பணம் எடுத்துக் கொண்டு வருவோம் என்றால் அதற்குள் இந்த வண்டி போய்விட்டால் எனக்குப் பெரிய நஷ்டம் ஏற்பட்டுவிடும்" என்று சொன்னான்.

போர்ட்டர் அவனை ஒரு தடவை தலையிலிருந்து கால் வரை ஏற இறங்கப் பார்த்து விட்டு, அவன் கையிலிருந்த மோதிரத்தை வாங்கிக் கொண்டு ஸ்டேஷனுக்குள் சென்றான். ரமாகாந்த் டிக்கெட் கொடுக்கும் ஜன்னலண்டையே உலாவிக் கொண்டு நின்றான். அவனுடைய கண்கள் மட்டும் போர்ட்டரின் வரவையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தன. பத்து நிமிஷமாகியும் போர்ட்டர் வராமற் போகவே, 'ஆள் மோதிரத்துடன் எங்கேயாவது கம்பி நீட்டியிருப்பானோ!' என்ற சந்தேகம் ரமாகாந்தின் உள்ளத்தில் எழுந்தது. உடனே அவன் ஸ்டேஷனுக்குள் நுழைந்து அந்தப் போர்ட்டரைத் தேடலானான். அச்சமயம் எதிரே வந்த கூலியாளைப் பார்த்து அவன் அந்தப் போர்ட்டரைப் பற்றி விசாரித்தான். "என் சாமி, அந்த ஆள் பெயர் தெரியுங்களா?" என்று அந்தக் கூலியாள் கேட்டு விடவே, ரமாகாந்த் தன் அசட்டுத் தனத்தை எண்ணி, நாக்கைக்

பற்களால் கடித்துக்கொண்டு 'ஹும்' கொட்டினான். அவன் அந்தப் போர்ட்டருடைய பெயரைக் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தால் அல்லவா, சொல்லுவதற்கு? அதற்குள் வண்டியும் வந்துவிட்டது. ரமாகாந்த் பொறுமை யிழந்து, 'ஆள் நம்மை ஏமாற்றி விட்டான்!' என்ற தீர்மானத்துடன், டிக்கெட் வாங்காமலேயே ஓடிப்போய் வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டான். யாராவது வந்து டிக்கெட் கேட்டால் 'என்னிடம் டிக்கட் இல்லை' என்று சொல்லிவிடுவோம். 'அப்படி அவன் இறங்கி விட்டாலும் அடுத்த ஸ்டேஷனில் தானே இறக்கிவிட வேண்டும்? அதற்குள் தான் நாம் பத்துப் பதினைந்து மைல்கள் தாண்டிவிடப் போகிறோமே!' என்று அவன் மனதைத் திடப்படுத்திக் கொண்டான்.

வண்டி புறப்பட்டு விட்டது. ரமாகாந்துக்குத் தன்னுடைய நிலைமையைப் பற்றி எண்ணும்போது அழுகை அழுகையாக வந்தது. இனிமேல் அவனுக்கு வீடு திரும்பி வரும் பாக்கியம் கிட்டுமா? பழைய சுகவாழ்வு வாழ அவன் எங்கே கொடுத்து வைத்திருக்கப் போகிறான்! அது போனது போனதுதான். இப்படியே உலகத்தாரின் கண்களில் படாமல் தலை மறைவாக வாழ்ந்துவிட்டு, என்றைக்காவது ஒருநாள் அவன் மடிய வேண்டியதுதான்.

கேவலம், சங்கோசப்பட்டதனால்தானே அவன் இந்த நிலைமைக்கு ஆளாக நேர்ந்தது? அவன் ஆரம்பத்திலேயே பத்மாவிடம் தனது உண்மை நிலையைச் சொல்லியிருந்தால், இப்படித் தன் முகத்தில் தானே கரியை அரைத்துப் பூசிக் கொண்டு, ஓடி ஒளியும்படி ஆகியிருக்குமா? ஆனால் அவன் எப்படிச் சொல்லுவது? சொல்லிவிட்டால் அவள் தன் பாக்கியத்தை நொந்து கொள்ள மாட்டாளா?

வண்டி புறப்பட்டுப் பத்து நிமிஷம்கூட ஆகியிராது. வண்டிக் கதவு திறந்தது. டிக்கெட் பரிசோதகர் உள்ளே நுழைந்தார். ரமாகாந்தின் முகத்தில் ஈயாடவில்லை. 'இன்னும் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் இவன் நம்மிடமும் வந்துவிடுவானே! இவ்வளவு ஜனங்களுக்கு மத்தியில் நாம் அவமானப்பட வேண்டி வந்துவிட்டதே!' என்ற எண்ணம் எழுந்ததும் அவன் மார்பு 'படபட' வென்று அடித்துக் கொள்ள லாயிற்று. டிக்கெட் பரிசோதகர் கிட்ட நெருங்க நெருங்க அவனுடைய நாடித் துடிப்பும் அதிகரித்தது. (தொடரும்)




### நியாயமில்லை

கேட்டில் நிற்பவன் (நாடகத்தில்):— என்ன ஸார்! பையனுக்கு அரை டிக்கெட்டு வாங்கியிருக்கிறீர்களே! இவனுக்கு மூன்று வயதுக்கு மேலே இருக்குமே. முழு டிக்கெட்டல்லவா வாங்கணும்?

பையனின் தகப்பனார்:— எதற்கு முழு டிக்கெட்டு? அவன்தான் பாதிக்கு மேலே தூங்க ஆரம்பித்துவிடுவானே!

●

### வித்தியாசந்தான்!

நண்பர்:—வேலை போய்விட்டதாமே, ராமுவுக்கு! என்ன காரணமோ?

மற்றவர்:— ஆமாம், எல்லாம் வித்தியாசம் தான் காரணம்!

நண்பர்:—ஏன் அவனுக்கும் முதலாளிக்கும் ஏதாவது வித்தியாசமோ?

மற்றவர்:— இல்லை, இல்லை. கணக்குப் புஸ்தகத்துக்கும் பணப் பெட்டிக்கும்தான் வித்தியாசம் இருந்ததாம்!

●

### பெயர்ப் பொருத்தம்

அப்பா:—என்டா கிட்டு! புதிதாக உனக்கு ஒரு வாத்தியார் வந்திருக்கிறாராமே. பையன்களையெல்லாம் அவர் ஓயாமல் திட்டுகிறாராமே! அவர் பெயர் என்ன?

கிட்டு:—ஆசீர்வாதம், அப்பா!

●

### பெரிய ஏமாற்றம்!

ஜோஸ்யர் ஜாதகத்தைப் பார்த்துவிட்டு முடிவில், "தற்சமயம் உங்களோடு நெருங்கிப் பழகும் ஒருவன் பெரிய ஏமாற்றத்தை யடையப் போகிறான்!" என்றார்.

ஜோஸ்யம் கேட்டுக் கொண்டிருந்தவர் சட்டென்று பையைத் தடவிப் பார்த்துவிட்டு, "அடாடா, மணிபர்ஸை வீட்டிலேயே வைத்துவிட்டு வந்துவிட்டேனே!" என்றார்.

●

### பேஷ்!

தாயார்:— விளக்கெண்ணெய் சாப்பிடுவதற்கு இந்தப் பாடா? கண்ணை மூடிக் கொண்டு பாயசம் என்று நினைத்து 'மடக் மடக்' கென்று இரண்டு வாயிலே விழுங்கி விடுவதற்கு என்ன?

பிள்ளை:—பாயசத்தை வாயிலே விடு, அம்மா! மருந்து என்று நினைத்துக்கொண்டு ஒரே வாயிலே விழுங்கிவிடுகிறேன்!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Pres
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்

★

தலைமை ஆபீஸ் :
" இந்தியன் பாங்க் பில்டிங்ஸ் "
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள் :
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 60,72,602 |

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

**N. கோபால அய்யர்**
செக்ரடரி

# தலைவலியால் கஷ்டப்படுவதே வழக்கமா இருந்தது

அவரது நண்பரால் சிபாரசு செய்யப்பட்டது க்ருஷன் சால்ட்ஸ்

அப்போதிருந்து அவருக்கு க்ருஷனே ஒரு சஞ்சீவியாக இருந்து வருகிறது

ஒரு சிநேகிதரின் ஆலோசனைப் உடம்பில் ஏற்படும் வலிக்கும் தூர் சேர்க்கைக்கும் ஒரு சஞ்சீவியாக மிஸ் வில்லியம்ஸ் க்ருஷனைச் சாப்பிட்டு தார். அதனால் ஏற்பட்ட பலனைக் கீ விவரிக்கிறார் :—

" அடிக்கடி தலை வலியாலும் தூர் சேர்க்கையாலும் நான் கஷ்டப்படுவ வழக்கமாயிருந்தது. எதைப் பார்த் லும் குரூபமாகத் தெரிந்தது. கண்க முன் சக்கரம்சுழலும் உணர்ச்சி இருந் ஒரு நாள் நான் அதேபோல் அவஸ் படும்போது என் நண்பர் ஒருவர் க்ரு னைக் கொண்டு வந்தார். ஒரு டம் வெந்நீரில் ஒரு டீ ஸ்பூன் க்ருஷ போட்டு என்னைக் குடிக்கச் செய்த மிகக் குறுகிய கால அளவிலேயே எனக்குப் பலனளித்து விட்டது. போது முதல் எப்போதுமே க்ரு எனக்கு ஒரு சஞ்சீவியாகவே இரு வருகிறது."—(மிஸஸ்) எம். வில்லியம்ஸ்

தலை வலியால் பாதைப் படும்போ அது ஒரு கெடுதலின் அறிகுறி என்ப அநேகர் மறந்து விடுகின்றனர். வயிற் கோளாறினால்தான் அது ஏற்படுகி என்பதை மிகச் சுலபமாகக் க பிடிக்கலாம். இரத்தத்தைக் கெடு மாறு ஜீரண பாதைகளில் கழி பொருள்கள் தேங்குவதால் தலை உண்டாகிறது என்பதையும் உ லாம். இந்த விஷப் பொருளை அ றுங்கள். கழிவுப் பொருள்களின் கத்தைத் தடுங்கள். இனி நீங் கவலையே படவேண்டாம்.

இப்படித்தான் தலைவலியி விரு விரைவாக நீடித்த நிவாரணத் க்ருஷன் அளிக்கிறது. முடக்கு வாதத் யும் இதர நோய்களையும் உண்டாக் அபாயகரமான விஷப் பொருளை அமிலங்களையும் அகற்றவே க்ரு இயற்கையாகவே உதவுகிறது.

க்ருஷன் சால்டஸ் பாட்டில் ஒன்ற ரூ. 1-10-0 வீதம் எல்லா கெமிஸ் ளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்

